**Boer War Series. No IV.**

# போவர் பிடிவாதம்.



(யுத்தம் நீடித்து நடந்ததற்கு நேர்ந்த

சந்தர்ப்பங்கள்.)



இது

ஒரு தன்னாட்டுநேசியால்

பெண்பிள்ளைகளும் வாசிக்கத்தக்க

எளிய நடையில் எழுதப்பட்டு,



சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

விலை அணா 6.] July 1902. [போஸ்டேஜ் அணா 1

# முன்னுரை.

கிச்சனர் பிரபு ஜானஸ்பார்க்கில் நடந்த ஒரு விருந்தின்போது போவர்கள் மகாபிடிவாதக்காரர்கள் என்றும், வெகு பராக்கிரமசாலிகள் என்றும் சமாதான உடன்படிக்கை நடந்தபிறகு சொன்னார்.

அதற்குத் தக்கபடி இந்தப் புஸ்தகத்திற்குப் போவர்பிடிவாதமென்று, அவர் அப்படிச் சொல்லுவதற்கு வெகுநாள் முன்னாலேயே பேரிடப்பட்டு அச்சிடத்தொடங்கப் பட்டது.

இந்தப் போவரின் பராக்கிரமத்தைப்பற்றியும் ஒரு புஸ்தகம் வெளியிடுவது நம் தமிழ்நாடு நேசிகளுக்கு நலமாயிருக்குமாதலால், அப்பெயருள்ள புத்தகமொன்றும் அச்சிடப்பட்டு வருகின்றது.

இந்தப்புஸ்தகத்தில் ஆங்காங்கே இந்த (*) அடையாளம் ஒன்று சில மொழிகளுக்குத் தலையில் போடப்பட்டிருக்கிறது. அந்த மொழிகள் தமிழில் இதுவரையில் இல்லாத கருத்துக்களையும், இதுவரையில் இருந்தும் இப்போதைய தமிழர்களுக்கு அர்த்தமாகாமல் இருக்கும் கருத்துக்களையும், ஆங்கிலேய பாஷையிலுள்ள கருத்துக்கிசையக்காட்டும்படிப் புதிதாய் இப்போது புணைத்து அமைக்கப்பட்டன. பின்னால், புஸ்தகத்துக்குக் கடைசியில், ஒரு உடன்கூட்டு, அல்லது அநுபந்தத்தில் அவற்றின் பொருள் இன்னவென்று விளங்கக்கண்டு கொள்ளலாம்.

இப்போது நாட்டிலுள்ள தமிழ்ச் செய்தியங்கள் அல்லது சமாசாரப்பத்திரிகைகளில் ஆங்கிலேயமொழிகளையே, உள்ளது உள்ளபடி—கமிட்டி, பேப்பர், பார்லிமெண்டு, கான்ஸர்வேடிவ், லிபரல் என்பவற்றைப்போல—உபயோகப்படுத்துவது தமிழுக்கு அழகன்றென்று நினைத்து பேர்சொன்னபடி புணைந்து அமைக்கப்பட்ட மொழிகளை ஆங்கிலேயக் கருத்துக்கிணங்க, சில அறிகுறிகளாகக் கையாண்டேனே ஒழிய, இம்மொழிகள் தவிர வேறே மாதிரியான மொழிகள் அவ்வக் கருத்துக்கு ஏற்றபடி இசையாஎன்ற எண்ணத்துடனன்று, இம்மொழிகளை அங்கீகரித்து அவ்வாறு அமைத்ததில் ஏதாகிலும் தப்புகள் உண்டாயின் என்னைத் தமிழ்நாடு நேசிகள் தயவுடன் மன்னிக்கும்படிக் கோருகிறேன்.

சகா-1825<br>
சுபகிருது௵<br>
ஆடிமீ 8௳.

☞ தன்னாடுநேசி.

# போவர் பிடிவாதம்

## 1- கூற்று.

## போவர் தாளுட்சிகோரியது.

இதற்குமுன் வெளியான "டிவெட், போதா, டிலாரி" என்னும் புஸ்தகத்தில் போவர்கள்செய்த சண்டைகளைச் சொன்னேன்; இந்தப்புஸ்தகத்தில் அவர்களுக்கிருந்த நெஞ்சழுத்தத்தையும், அவர்கள் பிடித்த பிடிவாதத்தையும், காட்டின மனோதைரியத்தையும்,கொண்ட கடைப்பிடியையும் பற்றிச் சொல்கிறேன்.

ஆரஞ்சு நாட்டின் தலைநகரத்துக்குக் கேடுகாலம் கிட்டக்கிட்ட வந்துவிட்டதென்று நினைத்து, அப்பிரஹாம்கிரால் என்னும் சண்டைக்கு இரண்டுநாள் முன்னால் ஆரஞ்சுநாடு, டிரான்ஸ்வால், இந்த இரண்டு குடியரசுகளின் குடியரசர்கள் சேர்ந்து சமாதானப் பேச்சுகள் அடங்கிய கடிதம் ஒன்று இங்கிலாந்துக்கு அனுப்பினார்கள்:—

"இந்த யுத்தத்தால் அநேகாயிரம் குடிகள் இரத்தம் கீழே சிந்தக் கண்ணீர்விட்டுக் கதறி அழும்

படியாய் கஷ்டப்பட்டிருக்கிறார்கள்; தென்னாபிரிகாவில் இந்தயுத்தத்தால் பலவிதமான நாசங்கள் சம்பவித்தன, இன்னமும் சம்பவிக்கும்;'இருதிறத்தாரும் என்னத்துக்காக இந்த யுத்தம் செய்கிறார்கள்? அவர்களின்கருத்து நிறைவேற இந்தமாதிரி குடிகளுக்குச் சகிக்கமுடியாத கஷ்டங்கள் வைப்பது நியாயமா?'—ஆக இப்படிநிஷ்பட்சபாதமாய்த் தங்களுக்குத் தாங்களே கேட்டுக்கொள்வது மிக அவசியமாகிறது.

"எங்களுக்குக் குடிகளைத் தொந்திரவு செய்யாமல் யுத்தத்தை நிறுத்தவேண்டுமென்ற கருத்தேயன்றி வேறன்று; ஆங்கிலேய நாட்டார் பல இராஜ்ய தந்திரிகள் இந்தக் குடியரசுகள் இரண்டும்சேர்ந்து மகாராணியின் அதிகாரத்துக்குத் தென்னாபிரிகாவில் வெந்நீரூற்றிஅதை வேரோடு களைவதற்காக இந்தயுத்தத்தைத் தொடங்கி இன்னும் நடத்திக்கொண்டுவருவதாகவும்,அப்படிவேரைக்களைந்தபிறகு மகாராணிக்குச்சம்பந்தப்படாமல் வேறே அரசாட்சி ஒன்று ஊன்றப்போவதாகவும் சொன்னதையும் கேட்டோம்; இந்த யுத்தமானது டிரான்ஸ்வால் குடியரசின் தானாட்சிகுலைந்துபோகாமல்காப்பாற்றுவதற்கு ஆரம்பிக்கப்பட்டது; அன்றி, (1)எங்கள் இரண்டு குடியரசுகளும் லோகத்தில் மற்ற எல்லா நாடுகளைப்போலத் தானாட்சியுடன் இராஜாங்கம் நடத்தும் பாத்தியதை எங்கள் கைவிட்டுப் போகாமலிருக்கும் பொருட்டும், (2) இந்த யுத்தத்தில் எங்கள் குடிகளோடு சேர்ந்து சண்டைபண்ணும் ஆங்கிலேய நாட்டு

டச்சுக்குடிகள் இராஜத்துரோகிகள் என்று ஆங்கிலேய துரைத்தனத்தாரால் அவர்களுக்குஉயிர்ச்சேதமும் பொருட்சேதமும் வராமலிருக்கும் பொருட்டும், இந்த யுத்தம் நாங்கள் இன்னமும் நடத்தி வருகின்றோம்.

"மேற்சொன்ன இரண்டுபேச்சுகளையும் ஆங்கிலேயர் எங்களுக்கு உறுதிபண்ணிக் கொடுத்தால் தென்னாபிரிகாவில் அமரிக்கையை நிலைநிறுத்த இஷ்டப்படுகிறோம்; இல்லாவிடில் தென்னாபிரிகாவில் அமரிக்கை நிலைநிற்காது; இந்தப்படியே யுத்தத்துக்கு முன்னாலும் இஷ்டப்பட்டோம்; மகாராணியவர்கள் எங்கள் குடியரசின் தாளுட்சியைப் பிடுங்கிக்கொண்டு எங்களை நாசம் பண்ணப் பார்த்தால், நாங்களும் எங்கள் குடிகளும் அதைத் தடுக்கும்படி முன்னாலேயே ஆரம்பித்திருக்கிற வழியை விட்டுவிட்டு எங்களுக்கு வேறேவழிபோக முடியாது; இந்தவழியில் ஆங்கிலேயர் ஒரு பெருந்தடையாயிருப்பார்களென்று எங்களுக்குத்தெரியும், தெரியாமற் போகவில்லை; ஆயினும் சுவாமி எங்கள் பெரியோர் மனதிலும் எங்கள் மனதிலும் அணையாத தாளுட்சிவிளக்கை ஏற்றிவிட்டு இப்போது கைவிடமாட்டாரென்றும், அவராய் எண்ணி எடுத்த வேலையை எங்களாலும் எங்கள் தலைமுறையார்களாலும் கைக்கொண்டு முடிக்கக் கூடுமென்றும் பூரணமான நம்பிக்கை எங்களுக்குஇருக்கிறது.

"இந்த எண்ணத்தை உங்களுக்கு இதற்கு முன்னால்அறிவிக்கவில்லை;ஏனென்றால்,இதுவரை

யில் எங்கள்பக்கம் ஜெயலட்சுமி கொலுவீற்றி ருந்தாள்; எங்கள் சேனைகள் மகாராணி அவர்க ளின் நாடுகளுக்குள் வெகுதூரம்போய் ஊர்களைப் பிடித்துக்கொண் டிருந்தன; இந்தமாதிரியான வெற்றிக்கொடி எங்களுக்குப் பறந்தபோது முன் சொன்ன எங்கள் எண்ணத்தை நாங்கள் உங்களுக்கு வெளியிட்டால், அது ஆங்கிலேய ஜனங்களுக்குஒரு அகௌரவமாய் இருக்கும்; அந்த அகௌரவம் அவர்களுக்குக் கொஞ்சநெஞ்சம் இருக்கும் நல்ல எண்ணத்தைப் போக்கடிக்கும்.

"இப்போது எங்கள் சேனைகளில் பெரிய தொன்றை மகாராணியார் சைனியம் பிடித்துவிட் டது; அதினால் எங்கள் சேனைகள் மற்ற இடங்க ளில் கைக்கொண்டிருந்த இடங்களை விட்டுவிடும் படி நேரிட்டிருக்கிறது; அதினால்ஆங்கிலேயருக்கு இதுவரையில்வந்தஅகௌரவம்போய்மகாகௌர வம்வந்துவிட்டதென்றெண்ணக்கவேண்டும்; அதில் யாதொருதடையுமில்லை; ஆகையால் நாங்கள் இன் னும் ஏன் சண்டை செய்துகொண் டிருக்கிறோம் என்றும், என்ன ஏற்பாட்டின் பேரில் தென்னு பிரிகாவில் அமரிக்கையை நிலைநிறுத்துவோமென் றும், இந்தப் பூமண்டலத்தில் நாகரிகமான சனங் கள்முன்னால் நாங்கள் சொல்லிக்கொள்ள யா தொருதடையும் எங்களுக்கு இல்லை" என்றும் அந்தக் கடிதத்தில் கண்டிருந்தது.

இந்தக்கடிதம் ஆறும்தேதி, அதாவது முன் சொன்ன சண்டைக்குமுன் தினத்தில், ஆங்கிலேய

மந்திரிமாருக்குளட்டிற்று. சிலநாள்கழித்தே, அதாவது 21-ம் தேதி, ஆங்கிலேயர் அதற்குப் பதிலொன்று அனுப்பினார்கள்:— "கனம் பொருந்திய தாங்கள் ப்ளூம்பாண்டீனி லிருந்து (மார்ச்சமாதம் 5-தேதி) அடித்ததந்தி எங்களுக்கு வந்து சேர்ந்தது. அதில்லோகத்தில் எல்லா அரசுகளைப் போலத் தங்கள் அரசுகளையும் தாளுட்சிகொண்டு வாழும்படிவிடவேண்டுமென்றும், அந்தஏற்பாட்டின்பேரில்தான் தாங்கள் யுத்தத்தை முடிவு செய்வீர்கள் என்றும் கண்டிருக்கிறது.

"மகாராணியாருக்கும் தங்களுக்கும் போன அக்டோபர்மீ இருந்த உடன்படிக்கையின்படிச் சமாதானமிருந்தது; சிலமாசகாலமாய் டிரான்ஸ்வாலிலிருக்கும் சில ஆங்கிலேயக் குடிகளின் கஷ்டமுறைகளை நிவர்த்திசெய்யும்படிப்பேச்சுகள் நடந்துவந்தன; அப்படிப் பேச்சு நடக்கும்போதே டிரான்ஸ்வால் நாட்டார் ஆயுதங்களும் சேனைகளும் சித்தப்படுத்தி வந்தார்கள்; ஆகையால் மகாராணியின் துரைத்தனத்தாரும் அதற்குத் தக்கபடி கேப்காலனி, நேட்டால், இந்தவெளிகளில் இருந்த காப்புச்சேனைகளைப் பலப்படுத்திச் சித்தப்படுத்திவந்தார்கள். மேற்சொன்ன உடன்படிக்கைகளில் கண்ட ஏற்பாடுகளுக்கு அதுவரையில் யாதொரு விக்கினமும் நாங்கள் செய்யவில்லை;. திடீரென்று டிரான்ஸ்வால்நாட்டார்மகாராணியின் துரைத்தனத்தார்க்கு இரண்டுநாள்கெடுக்கொடுத்துக் கடைப்பேச்சுக்கடிதம் ஒன்றை மிக அவமானகரமாய் அனுப்பித்தார்கள்; யுத்தமும்

ஆரம்பித்தார்கள். ஆரஞ்சுநாட்டாருடன் யாதொரு வழக்கும் மகாராணியார்க்கு இல்லாதிருக்க அவர்களும் அம்மாதிரியே செய்தார்கள். மகாராணியாரின் நாடுகளைப்படையெடுத்தீர்கள்; அந்த நாட்டுக்குள் மூன்று ஊர்களுக்கு உயிர்ச்சேதம், பொருள்சேதம் இரண்டும் வாராதவண்ணமெல்லாம் வந்தன.

"இந்த நாடுகளில் பெரும்பாகத்தைத் தங்கள் குடியரசுக்குச் சேர்த்து விட்டீர்கள்; அப்படிச் சேர்த்த பாகத்தின் குடிகளைத் தங்கள் குடிகள் போல நடத்தினீர்கள்; இந்த மாதிரி டிரான்ஸ்வால் நாடு செய்யும்படி எண்ணி வெகுநாளாய்ப் பலமான ஆயுதங்கள் சேர்த்து வந்தது; இந்தஆயுதங்களைப் பார்த்தால், அவை ஆங்கிலேயருக்கு விரோதமாய்த்தான் உபயோகப்படுத்தச் சேர்க்கப்பட்டன என்று இப்போது தோன்றுகிறது.

"கனம் பொருந்திய தாங்கள் இந்தமாதிரியாய்ச் செய்ததற்கு ஏதோ ஒரு கருத்துசொல்லுகிறீர்கள்; தாங்கள் எடுத்த வாதத்தை ஆங்கிலேயர்களும் வாதித்துப் பேசும்படி யகத்தியமிருக்கிறதாக மகாராணியார்க்குத் தோற்றவில்லை. இந்தமாதிரி நீங்கள் ஆயுதங்களை வெகுஇரகசியமாய்ச் சித்தப்படுத்தி வந்தீர்கள்; அதினால் ஆங்கிலேய நாட்டை வெகுபலமாய்ப் படையெடுத்து வந்ததங்கள் படையை எதிர்த்து நிற்கும்போது, ஆங்கிலேயர்க்கு அநேகாயிரம் உயிர்கள் சேதம் வந்தன; யுத்தத்துக்கு வெகு பணம் செலவழிந்துபோ

யிற்று; இந்தமாதிரி ஆங்கிலேயர்கள் இரண்டுகுடியரசுகளைத்தென்னுபிரிகாவில் உயிருடன் வைத்திருந்ததினுலல்லவோ அக்குடியரசர்களால் ஆங்கிலேயர்களுக்கு இந்தவிதமான பெருங்கேடு வந்தது? சிலவருஷகாலமாயக்குடியரசுகளைஉயிருடன் வைத்துப்பார்த்ததற்கு இதுதானு அவர்களுக்குத தண்டனை? இந்தப்படி இவ்விரண்டு குடியரசர்களும் தங்கள் நாட்டுக்குக் கிடைத்த ஸ்திதியைக் கொண்டு துர்ப்புத்தியாய் நடந்துகொண்டார்கள். ஒருகாரணமு மில்லாமலே மகாராணியாரின் நாடுகளில் படையெடுத்துச் சென்றூர்கள்; அந்தப்படிப் படையெடுத்துச் சென்றதினுல் மகா ஆபத்துக்கள் வந்தன; இப்படியெல்லாம் செய்ததினுல் தாங்கள் அனுப்பித்த தந்திக்கு மகாராணியார் ஆரஞ்சுநாட்டுக்காகட்டும், டிரான்ஸ்வாலுக்காகட்டும் தாளுட்சி கொடுப்பதற்குச் சம்மதப் படவில்லை என்றுதான் பதில் அனுப்பவேண்டும்.''

இந்த டிரான்ஸ்வால் நாடும் ஆரஞ்சு நாடும் தமக்கு ஆங்கிலேயர் தாளுட்சிகொடுக்க இஷ்டப்படவில்லைஎன்றுதெரிந்துகொண்டு அமெரிக்கா ஐக்கிய மகாணங்களுக்கும், ஐரோப்பிய இராஜாங்கத்தார்களுக்கும் தங்கள் சமாதான அபிப்பிராயத்தைத் தெரிவித்து இந்த யுத்தத்தில் தலையிட்டு அதை நிறுத்தும்படிக் கேட்டுக் கொண்டன. அவர்கள் அப்படித் தலையிடவுமில்லை, யுத்தம் நிற்கவுமில்லை.

முன்னே, டிரான்ஸ்வாலுக்குத் தாளுட்சிவந்தவுடன் பிரிடோரியாவில் இருந்த அமெரிக்கா ஐக்கிய

நாட்டுத் தூதன் இந்தத்தாளுட்சிக்குரிய காகிதங்க ளைத்தன்னுட்டுக் குடியரசனுக்கு அனுப்பித்தான். அந்தக் காகிதங்களைப்பார்த்தால் இந்தத்தாளுட்சி யை ஆங்கிலேயர், பிராஞ்சியர், ஹாலண்டர், பெல் ஜியர் இவர்கள் யாவரும் ஒப்புக்கொண்டதாக ஏற்படுகிறது. அந்தத் தாளுட்சியை ஐக்கியநாட டுக் குடியரசன் ஒப்புக்கொண்டான்; அன்றி, தாளுட்சிக் குண்டான * இராஜாமிசத்தையும் அவன் ஒப்புக்கொண்டான். இந்தத் தாளுட் சியையும் இராஜாமிசத்தையும் அவன் ஒப்புக் கொண்டதற்கு அடையாளமாய்அதற்குத் தகுந்த எந்த ஏற்பாட்டையும் எப்போதும் செய்துவரச் சித்தமாயிருக்கிறதாகச் சொன்னான். இந்தச்சம யத்தில் தூதருடைய குடியரசின் க்ஷேமத்தை மிக வும் கோரிக்கொண்டிருப்பதாகவும் சொன்னான். இப்படியே, டிரான்ஸ்வால் நாட்டுக்குத் தாளுட்சி யரசுபுரிவதற்குப் பாத்தியதையிருக்கிறது என்று ஏறக்குறைய எல்லா அரசர்களுக்கும் தெரிந்தி ருந்தும், இக்குடியரசர்கள் அவர்களுக்கு அனுப் பிக்கொண்ட மனுவை அவ்வரசர்கள் ஏன் தள் ளிப்போட்டார்கள்?

இந்தமாதிரி, சத்துருவும் மித்துருவுமான இராஜாக்கள், போவர்கள்சமாதானம் சமாதானம் என்று கதறி அழுதுகேட்டதற்குச் சாதகமான பதில் அனுப்பாமற் போனதினால், கூட்டாளி களாய்க்கூடின குடியரசுகளுக்கு இன்னும்பிடிவா தம் அதிகரித்தது. போவர்களுக்குஇந்த மாதிரியா னபதில்வந்ததினால் இனிச்சாகவேண்டும் அல்லது

அடிமைப்படவேண்டும் என்னும் எண்ணம் மன தில்படிந்துபோயிற்று. அதினால் அடிமைப்படுவதி னும் சண்டைசெய்து இறப்பதே நலம் என்று வீம்பு கொண்டார்கள். அவர்களுக்குச் சுமார் 40,000 சேனைகள்தானிருந்தன. ஆனால், ஆகா ரம், ஆயுதம், மருந்து இவைகள் மாத்திரம் கொள்ளையாய்க் கிடந்தன. அவர்கள் அப்போது முதல் குரங்குச்சண்டை போடத்தொடங்கினார் கள். அது எத்தனைகாலம் நடக்குமென்று அப் போது ஒருவராலும் நிச்சயிக்கக்கூடவில்லை.

போவர்களிடத்தில் வைத்தியனாயிருந்த ஆஸ் டிரியா நாட்டான் ஒருவன் பின்னால் கண்டபடி இந்த யுத்தம் நடந்துவரும் காலத்தைப்பற்றிச் சில சேதிகள் சொன்னான்:—ஆங்கிலேயர் பிரி டோரியாவுக்குப் போவதே கஷ்டம். அப்படிப் பெருஞ்சேனைகளுடன் போனாலும், அது உப யோகமில்லை. பிரிடோரியாவின் கோட்டை மகா பக்குவமாய்க் காக்கப்பட்டிருக்கிறது. ஒருவரு ஷத்துக்குஆகும்படி உள்ளே ஆகாராதிகள் இருக் கின்றன. அதற்குள் வைத்திருக்கும் பீரங்கிகள் மகா சிரேஷ்டமானவை. இன்றைக்குப் புதிதாய்ப் பீரங்கிகள் ஏதாவது கண்டுபிடித்தால், அப்படிக் கண்டுபிடித்த பீரங்கிகளையும் அங்கே காணலாம். ஆங்கிலேயப் பீரங்கிகள் அவற்றிற் கீடில்லை. இ தையெல்லாம்விட, முற்றுகைபோடும் சேனைக்கு ஆகாராதிகள் வருவது கஷ்டம்; கோட்டைகளில் போவர் சைன்னியமெல்லாம் இருந்து சண்டை போடக்கூடாதென்று ஏற்பாடு செய்யப்பட்டது.

அப்போது கோட்டைக்குள் இருக்கும் சில போவர்கள் போகப்பாக்கிச்சேனையெல்லாம் வெளியே அங்கங்கேயிறைந்துகிடக்கும். துறைமுகங்களிலிருந்து சாலைகளைக் காப்பது கஷ்டம். இறைந்து நின்ற போவர்கள் அங்கங்கே திடீர் திடீர் என்று கிளம்பி எல்லாவற்றையும் தொம்சம்பண்ணுவார்கள்; திடீரென்று மறைந்துபோவார்கள்; பின்னும் திடீரென்று கிளம்பிக் குதிப்பார்கள்; இந்தமாதிரி வருஷாந்தரக்கணக்காய்ப் போவர்களுக்குச் சண்டைபோடத் திராணி யுண்டாயிருக்கிறது. ஆங்கிலேயரும் அந்தமாதிரிச் செய்ய ஆரம்பித்தால் அவர்கள் சேனைகள் மிகவும் நிகிலடைந்து போகும். போவர்களின் வேவுகாரர்கள் மிகவும் கெட்டிக்காரத்தனமாய் வேவுசெய்து வருகிறார்கள். டிரான்ஸ்வாலிலும் ஆரஞ்சுநாட்டிலும் சில போவர்கள் படைகளைக் கையிலெடுக்காமல் கலப்பைத் தொழில் செய்துகொண்டே, தங்கள்பக்கத்தில் சண்டைகள் நடக்கவேண்டியிருந்தால் தம் நாட்டுப்படைகளுக்கு வேவு இருந்து எதிரியின் நடவடிக்கைகளைச் சொல்லும்படி ஏற்பட்டிருக்கிறார்கள்; இந்த வேவுப்போவர்கள் நாடறிந்த பழம்பெருச்சாளிகள்; தம்நாட்டில் இண்டு இடுக்கெல்லாங்கூட நன்றாய்த்தெரிந்தவர்கள். இந்தமாதிரி வேவுகள் ஏற்பட்டிருப்பதால், அது குடியரசின்சைனியம் அங்குமிங்கும் திரிந்துவர வெகுசாதகமானது. இப்படிப் போவர்கள் நாடு தெரிந்தவர்களானதால், ஒரு நிமிஷத்தில், கண்மூடிக் கண்திறப்பதற்குள், சேர்ந்து பிரியக்கூடிய சாமர்த்தி

யம் அவர்களுக்கு ஏற்படுகிறது; ஆகையால், ஆங்கிலேயருக்கு,இன்ன இடத்தில் போவரைத் தாக்கலாம், இன்ன இடத்தில் போவர் தம்மைத் தாக்கப் போகிறார்கள் என்று நிச்சயமாய்ச் சொல்ல முடியாது; அப்படி எண்ணி நடக்கமுடியாது;— என்றான். பின்னால் பிரிடோரியா துறக்கப்பட்ட போதிலும்இவன்சொன்னபடி பிரிடோரியாவுக்கு வெளிப்புறங்களில் அங்கங்கே நடந்தது.

துநகர் ப்ளூம்பாண்டீன் பிடிபடுவதற்குச் சற்று ஒருமாசமுன்னால், பிரிடோரியாவில் ஒரு அமெரிக்கா நாட்டாரோடு பேசினபோது, அடியிற் கண்டபடி சில சங்கதிகள் இந்த யுத்தத்தைப் பற்றி வெளியிட்டார்:—இந்த யுத்தம் இப்போதுதான் ஆரம்பித்திருக்கிறது; போவர்கள் உலகத்தார் எல்லாரைக்காட்டிலும் உயர்ந்த படையாளிகள்; இதர இராஜாக்கள் இந்தயுத்தத்தில் தலையிடவேமாட்டார்கள்; ஜானஸ்பர்க் தங்கச் சுரங்கங்களையாவது வேறே எந்தச்சொத்தையாவது போவர்கள் நாசம்பண்ணமாட்டார்கள். எப்படியோ அப்படி, குடியரசுகள் தாளுட்சியைக் கைவிடாது ஸ்திரப்படுத்திக்கொள்ளச் சித்தப்பட்டிருக்கின்றன. இந்தயுத்தத்துக்கு முன்னாலேயே இன்னம் பெரியபீரங்கிகள் வாங்காமல் போனதற்கு மிகவும் சஞ்சலமா யிருக்கிறது. யுத்தம் இப்போது முடியுமென்று சொல்லமுடியாது; இதற்கு மெய்ப்பாடாய்ப் பைபிலிலிருந்து வாக்கியங்கள் உதகரிக்கிறேன். இந்த யுத்தத்தில் வரும் நஷ்டங்களால் மானவர்கள் திகைத்

து நிற்பார்களென்று நான் இதற்குமுன்னால் சொன்னதை இந்தச்சமயத்தில்விரித்துச்சொல்கிறேன். அப்படித் திகைப்பார்கள் என்றுசொன்ன போது ஆங்கிலேயர் சிரித்தார், ஒருமாசத்துக்குள் போவர்களைச் செயித்து நாடு கட்டிக்கொள்ளலாமென்றார். இப்போது தென்னாபிரிக்காவில் ஒவ்வொருவீடும் கைவிடப்பட்டு நாசமடைந்து போயிற்று. அப்படியிருந்தும், யுத்தம் இப்போது தான் தொடங்கியிருக்கிறது. யுத்தம் முடிந்து அமரிக்கைநிலைபெறும்போது,எவ்வளவுபேர்நூற்றுக்கணக்காயும், ஆயிரக்கணக்காயும், லட்சக்கணக்காயும் துக்கிப்பார்களோ தெரியாது. கடவுள் ஒருவர் உண்டு என்பது எவ்வளவு நிச்சயமோ அவ்வளவு நிச்சயம் டிரான்ஸ்வாலுக்குச் செயம் வருவதுங்கூட; இன்னும் ஒருமாசத்திலேயே செயம்வரலாம்;அல்லது,மூன்றுவருஷம் பிடித்தாலும் பிடிக்கலாம்; போவர்களுக்குத் தானாட்சிவர வேண்டும், யுத்தம் முடியவேண்டும். தானாட்சியின்றி யுத்தம் முடியாது; டிரான்ஸ்வால் செயித்தால், அதற்கு யதேச்சையும் சுவாதீனமும் தவிர வேறொன்றும் வேண்டுவதில்லை. இந்தயுத்தத்துக்கு நிஜமானகாரணம் என்னென்றால், ரோட்ஸுக்குத் தனக்குச்சொந்தமாய்ப் பெருமையொன்றும் பிரதிஷ்டை ஒன்றும் வேண்டுமென்று இந்தப் போரைக்கிளப்பினாராம். அமெரிக்காநாட்டுக்குடியரசனைத் தலையிடும்படிப் போவர்கள் கேட்கவில்லை. எல்லாச் சொத்துக்களும் சுரங்கங்களும் சொந்தக்காரனைவிட அதிகமான அக்கரையுடன்

காக்கப்பட்டு வரும். சந்திரமண்டலத்தில் மானு வர்கள் குடியிருக்கிறார்களென்று சொல்லுகிறார் களே! அப்போது, ஆங்கிலேயர் அதையும் கட்டிக் கொண்டிருக்கவேண்டுமே? ஏன் சும்மாவிருக்கி றார்களோ தெரியவில்லை !—என்று அப்போது ரு கர் சொன்னாராம். இப்படியெல்லாம் யுத்தம் நடக்குங்காலத்தை ஆங்கிலேயர் கேட்டும் வாசித் தும் சமாதானம் ஏற்படவில்லை.

இந்தமாதிரிப் போவர்க் குடியரசர்கள் பல நாடுகளுக்கு மனுக்க ளனுப்பித்ததும் தவிர, அந்தந்த நாட்டுக்கே நேரேபோய், அங்கே குடிக ளுக்கு யதார்த்தத்தைச் சொல்லும்படி சிலபோ வர்களையும் அனுப்பித்தார்கள்.

எங்கேபோனாலும், "எனக்குவேண்டாம் பூ சனிக்காய் எனக்குவேண்டாம் பூசனிக்காய்" என்று அந்தந்தநாட்டு இராஜாங்கத்தார்கள் இரா ஜாங்கமுறையில் அவர்களை அழைத்துக்கொள்ள வில்லை; இராஜாக்கள் சேவை கொடுக்கவில்லை; ஏ னென்றால்,ஆங்கிலேயருக்கு அதுஒரு அகௌரவ மாயிருக்குமென்று நினைத்தார்கள். இந்தச் சிறுநா டுகளுக்காகப் பெரியபெரிய நாட்டுக் குடிகளும் அரசர்களும் ஒருவருக்கொருவர் அவமரியாதை யாய் நடந்துகொண்டு போர்மூட்டிச் சுட்டுக் கொண்டுசாவது அனுவசியமென்று அப்படிச் செய்தார்கள். ஆங்கிலேயரும் உலகத்தில் எல்லா ராஜாக்களுக்கும் "இந்தயுத்தத்தில் யார் தலையிட வேண்டுமென்று ஆசைப்படுகிறார்களோ அவர்

கள் எங்களுடன் யுத்தத்துக்குச் சித்தமாய் இருக்கலாமென்று ஒரு விளம்பரம் போட்டுவிட்டார்கள்.

ஆகையால் இந்தமாதிரித்தேசம் தேசமாய்ப் போன இந்தப்போவர்ச் சமாதானக் கூட்டத்தார் தாங்கள்போன நாட்டுக்குடிகளுக்கு வாஸ்துவம் சொல்லுகிறோமென்று அங்கங்கே உபந்நியாசம் பண்ணிவந்தார்கள். இதுவரையில் அப்படியே செய்துவந்தார்கள்.



## 2-வது கூற்று.

# கலகப் போவர்க்கு மன்னிப்பு கோரியது.

பிறகு டிவேட், போதா, டிலாரி, ஸ்டேயின், வில் ஜோயன் முதலிய போவர்களின் படைத்தலைவர்கள் ஒன்று சேர்ந்து குரங்குச் சண்டை ஆரம்பித்து நாட்டி லங்குமிங்கும் மேலுங்கீழுமாய்ச் சண்டை பண்ணி ஆங்கிலேயரை ஆட்டிவைப்பது பார்த்தும் ராபர்ட்ஸ் பிரபுவானவர் இந்தமாதிரியான குரங்குச் சண்டையை ஒரு யுத்தமாய் மதிக்காது யுத்தம் இனிநின்றுபோ மென்று நினைத்துக் கொண்டு இங்கிலாண்டுக்கு அப்படியே எழுதிவிட்டார். மகா சாமர்த்தியவானாகிய ராபர்ட்ஸ் பிரபு அப்படி எழுதவே, ஆங்கிலேயத் துரைத்தனத்தாரும் அதை நம்பிவிட்டார்கள்.

இதல்லாமல், போவர்கள் செய்த சண்டையின் மாதிரியைப்பார்த்து இனிப்பூர்வீகந்தொட்டு வழக்கமாய் நடந்துவந்த யுத்தத்தின்மாதிரியைச் சீர்திருத்த வேண்டுமென்று ஆங்கிலேய மந்திரி மார்கள் நினைத்தார்கள். இதற்காக இங்கிலாந்தில் நல்ல ஆள் வேண்டியிருந்தது. ஆகவே மந்திரி மார்கள் யோசித்து இனி ராபர்ட்ஸ்பிரபு தென்னாபிரிகாவில் இருக்கவேண்டிய அவசியமில்லையென்றும் அவர்க்கு உதவியா யிருந்த கிச்சனர் பிரபு

இருந்து.யுத்தத்தை முடித்து விடுவார் என்றும் யோசனைபண்ணி ராபர்ட்ஸ் பிரபுவை இங்கிலாந்துக்கு வரச்சொல்லி உத்தரவு பண்ணிவிட்டார்கள்.

ராபர்ட்ஸ் பிரபுவானவர் புல்லர்ச் சேனாதிபதியுடன் இங்கிலாண்டு போய்ச் சேர்ந்தார். அங்கே தாம் போனபிறகும்கூட யுத்தம் முடிந்துபோயிற்று என்று சொன்னார். இங்கிலாண்டில் பிரிடோரியா பிடிபட்ட வருஷத்தில் * நாட்டமைதிச் சட்டப்படி * அரசுக்குடிச்சபை கலைந்து புதியதாய் ஏற்பாடாக வேண்டியிருந்தது :— இங்கிலாண்டில் அரசுநடத்தும் அரசுக்குடிச்சபையில் இரண்டு கட்சிகளுண்டு; ஒன்று, உலகமெல்லாம் தனியே திக்கற்றுக்கிடக்கும் நாடுகள் பார்த்து அவற்றை மடக்கிக் கட்டித் தம்நாடு பெருக்கும் கட்சி; மற்றொன்று, தம்கீழ் இப்போதுள்ள நாடுகளே போதுமானவை என்று திருப்தியடைந்து அந் நாட்டையெல்லாம் ஒன்றுபடுத்தி ஒடுக்கித் தழுவவேண்டுமென்று ஆசைகொண்ட கட்சி; யுத்தம் தொடங்கினபோதும் முதற் கட்சியார்தான் மந்திரிகளாய் அரசாட்சி புரிந்தார்; இப்போதும் முதற்கட்சியார் தான் அரசாண்டு வருகிறார்கள். அரசுக் குடிச்சபை கலைந்தவுடன், ஒவ்வொரு கட்சிக்காரர்களும் மகாராணியின் மந்திரித்துவம் தமக்கு வேண்டும் தமக்கு வேண்டுமென்று இங்கிலாண்டின் குடிகளுக்கு விண்ணப்பம் பண்ணிக் கொண்டார்கள்; * நாடுமடக்கிக்கட்டுங்கட்சியார் "யுத்தம் முடிந்து

போயிற்று; இந்த யுத்தத்தை வெகு சுலப
மாய் முடித்துவிட்டோம்; மகாராணிக்கு வெகு
கீர்த்தியும் லாபமுமுண்டாயின; ஆகையால், நாங்
களே மகாராணிக்கு மந்திரித்துவம் நடத்துவோ”
மென்று கேட்டுக்கொண்டார்கள்.

அவர்க்கு எதிர்கட்சியான * நாடொடுக்கித்தழு
வுங் கட்சியார் தமக்கே மந்திரித்துவும் வேண்
டுமென்று அவ்வளவு ஆவலோடு குடிகளுடன்
மல்லுக்கு நிற்கவில்லை; ஏனென்றால், “குடிகளுக்கு
இந்த யுத்தத்தில் மிக்க ஆவல் உண்டாயிருந்தது;
சிறு சுண்டெலி போன்றவர் சிம்மம்போன்ற நம்
மையும் தோற்கடிக்கிறதா! அவர்களை வேரோடு
களைந்துதான் மறுவேலைபார்க்கவேண்டும் என்ற
ஆத்திரம் பிறந்திருந்தது; அந்தச்சமயத்தில் நாடு
ஒடுக்கும் கட்சிக்குநாட்டாண்மைவந்தால்,போவர்க
ளுக்குத் தானாட்சி அல்லது அதற்குச் சரியான
சாதகங்கள் கொடுத்துவிட்டு யுத்தத்தை நிறுத்த
லாமென்ற ஒருபயமுஞ் சந்தேகமும் ஆங்கிலேயக்
குடிகள் வைத்துக்கொண் டிருந்தார்கள்; ஆகை
யால், அப்படிப்பட்ட குடிகளுக்கு விண்ணப்பம்
பண்ணிக்கொண்டும் உபயோகமில்லை. காலம்வரும்
போது, நாடொடுக்கும் கட்சிமேல் குடிகளுக்குத்
தானாய் வெறுப்பு வந்துவிடும்; அப்போது நம்மை
அமைச்சு புரிய வலியக் கூப்பிடுவார்கள்” என்று
நினைத்துக்கொண்டு அநேகம்பேர் தம் கட்சிக்கு
அதிகாரம் வேண்டுமே யென்று வாய்திறந்தொரு
வார்த்தையும் பேசவில்லை; ஆனால், சிலபேர் மாத்

திரம்கடனுக்குக்குடிகளுடன் எதிர்வாதம்பண்ணி னார்கள்.

இந்த எதிர்வழக்கை **இங்கிலாண்டின்** குடிகள் காதில் போட்டுக்கொள்ளவேயில்லை. இரண்டு கட்சிக் காரர்களுக்கும் சாதக பாதகமாய்ச் சீட்டுக்கள் போட்டுப் பார்த்ததில், நாடுஒடுக்கும் கட்சிக்கு வந்த * பொறுக்குச்சீட்டின் தொகையைக் காட்டிலும் நாடுமடக்கும்கட்சிக்கு வந்த சீட்டுக்கள் 200 க்கு மேலே அதிகமாய் இருந்தன. ஆகையால், இதுவரையில் யுத்தம் நடத்தி வந்த கட்சிக்கே மந்திரித்துவம் நிலைத்துப்போயிற்று.

**இங்கிலாண்டில்** இப்படி யிருக்கும்போது, தென்னுபிரிகாவில் சேனுதிபதித் தலைமையை வகித்து நின்ற **கிச்சனர்** பிரபு யுத்தத்தை நடத்திப்பார்த்ததில், யுத்தம் இப்போதைக்கு இலகுவாய் முடியாதென்று நினைத்தாராம்; அவர்க்குச் சீக்கிரத்தில் யுத்தம் முடியுமென்று மனதில் கொஞ்சமேனும் தோற்றவில்லையாம்.

இவர் தென்னுபிரிகாவுக்குப் புதிதாய் வந்தபோது இங்கிலாண்டின் யுத்தமந்திரிகளைப்பற்றிக் கோபமாய்ப் பேசினுர்; ஏனென்றால், சேனைகளையும் ஆயுதங்களையும் சரியாய்ச் சித்தப்படுத்தாமல் யுத்தத்தை ஆரம்பித்துத் தோல்வி யடைந்து மானக்குறைவு வைத்துவிட்டார்கள் என்று கிச்சனர் பிரபு நினைத்தார். ஆனுல், தான் தென்னுபிரிகாவில் கப்பலைவிட்டு இறங்கின நாள்முதல் எத்தனைமாசத்துக் கெல்லாம் யுத்தம் முடியுமென்று

அவரை ஒருவர் கேட்டதற்கு, ஒருவருஷம் பிடிக்குமென்றார். இவர் 1900-வருஷம் ஜனவரிமீ தென்னாபிரிகாவந்துசேர்ந்தார்; நியாயமாய் இவர் எதிர்பார்த்தபடி, இந்த யுத்தமானது 1901-ஷு ஜனவரிமாதத்தில் நின்றுபோய் நாடெல்லாம் சமாதானப்பட்டிருக்க வேண்டியது. 1901-ம் வருஷம் ஜனவரி மாதத்தில் யுத்தம் நிற்கவில்லை; "இன்னம் நிற்க வில்லையே! நாம் சொன்னது பொய்யாய்ப் போகுமோ என்னமோ தெரியவில்லையே! ஆகையால், இந்த யுத்தத்தை நிறுத்துவதற்கு ஏதாவது ஒரு ஏற்பாடு பண்ண வேண்டு" மென்று நினைத்தாரோ என்னமோ தெரியவில்லை.

1901-ம் வருஷம் பிப்ரவரி மாதம் பிறந்த உடனே போவர்ச் சேனாதிபதித்தலைவராகிய போதாச் சேனாபதியின் மனைவியாரைக் கூப்பிட்டு "அம்மா! இந்தயுத்தத்தில்சனங்கள் வீணேமடிந்து போகிறார்கள்; நாடுகள் நாசமாகின்றன; தங்களுடைய புருஷருக்குத்தாங்கள் போய்ச்சொல்லி எப்படியாயினும் சமாதானத்துக்கு ஏற்பாடு செய்தால் செய்யுங்கள்; எனக்கு இஷ்டந்தான்" என்று சொல்லிப் போவர்களைச் சமாதானத்துக்குக் கூப்பிட்டாற்போல, அந்தம்மாளைத் தம் கணவரிடத்தில் சமாதானத்தின்பொருட்டு அனுப்பித்தார்.

இந்தத்தேதிமுதல் இந்தயுத்தத்துக்கு வேறே அந்தஸ்து ஒன்று புதிதாய் ஏற்பட்டது; ஏனென்றால், இந்தச் சமாதானப்பேச்சுக்களை ஆங்கிலேயர்தான் முதல்முதல் எடுத்துப்பேசினார்கள். அதி

னால், அது போயர்களுக்கு ஒரு பெருமையாம். சிங்கம் சுண்டெலியைப் பார்த்து "என் சொற்படி கேள்; இல்லாதுபோனால்கொன்றுவிடுவேன்" என்றுவலுவில் சொன்னால் சுண்டெலிக்கு என்ன பெருமை? அதுபோலத்தான் இதுவும்! ஆங்கிலேயரே சமாதானத்தை முதல் எடுத்துப் பேசின போதிலும்போயர்க்கதுஎப்படிபெருமையாகும்?

போதாச் சேனாதிபதி இந்தச் சமாதானப் பேச்சுக்களை எப்போதும் தமது துரைத்தனத்தார் சார்பில் பேசிவந்தார். ஆங்கிலேயர்கள் போயர்ச் சேனாதிபதித்தலைவர்தான் போயர்களுக்கெல்லாம் அதிகாரி என்பதாக அவரைத் தனியாய்வைத்து, அவருக்கு மேலே துரைத்தனம் என்பது கிடையவே கிடையாது என்பதுபோல, அவரிடத்தில் பேசினார்கள்.

**கிச்சனர்** பிரபுவானவர் குடியரசுகளுக்குத் தானாட்சி என்பது இனிக் கிடைக்கமாட்டாது என்பதை எடுத்துக்காட்டிக்கொண்டே போதாவோடு பேசினார். இதினால், "போயர்கள் தங்களையும் தங்கள் நாடுகளையும் வேரோடு நாசம்பண்ணும்படி ஆங்கிலேயர் ஏற்பாடு பண்ணுகிறார்கள் என்று நினைத்தார்கள். இதற்குமுன்னால், யுத்தத்துக்குமுன், முதல்முதல் போயர்கள் கடைப்பேச்சு அனுப்பித்தபோது, ஆங்கிலேயர்கள் போயர்க் குடியரசுகளை "துஷ்டக் குடியரசுகள்" என்று சொன்னதும், ஆங்கிலேயப் பிரதான மந்திரியார் குடியரசுகளுக்குக் கொஞ்சமேனும் தானாட்சி

1·127-27



என்ற நாற்றமுமிருக்கக்கூடாது என்று சொன்னதும் இப்போது போதாவுக்கு ஞாபகம் வந்தன.

இப்போது இராணுவத்தார் ஆளும் *படை ஆட்சியை யுத்தத்துக்குப் பிறகு நீக்கிவிட்டு, சில ஆங்கிலேயர்களைப் போவர் தேசங்களில் வைத்து நம் மிந்தியாவை ஆளுவதுபோ லாள வேண்டுமென்று சொன்னார்கள்; அதாவது, துரைத்தனத்து ஆலோசனைச்சபையில் குடிகளின் கஷ்ட நிஷ்டூரங்களைப் பற்றிப்பேசும் போவரில்லாமலே, துரைத்தனத்தாரே இஷ்டப்படிக் குடிகளுக்குவரிபோடும்படி ஏற்பாடுகள் செய்து, இப்படிக் கணக்குவழக்கில்லாமல் வெகுநாள் கழிந்தபிறகு குடிகளின் பக்கமாய்ச் சிலரைத் துரைத்தனத்துச் சபையில் துரைத்தனத்தாரே ஏற்படுத்தி, இராச்சியம் நடத்துவதாகச் சொன்னார்கள்.

**போவரும் பிரிடனும்** சத்துருவாய்ப் போர் செய்தகாலத்தில் போவர்கள் நியாயமாய் யுத்தத்துக்குவேண்டிய செய்கைகளைச் செய்திருந்தால், அவற்றைச் செய்ததி னிமித்தம் போவர்களுக்கு ஒரு தண்டனையு மில்லை என்று போவர்களுக்குச் சொல்லப்பட்டது. இதை லவலேசமும் யோசனையில்லாமல் ஆங்கிலேயர்கள் போவர்களுக்குச் சொன்னார்கள் என்று போவர்கள் நினைக்காது போனாலும், இதில் என்னமோ மோசமிருக்கிறது என்று நம்பினார்கள். இதினால், யுத்தத்தில் ஒவ்வொருகக்ஷிக்கும் உள்ள உரிமைகளைப்போவர்

களுக்குக் கொடுக்க ஆங்கிலேயருக் கிஷ்டமில்லை என்றாயிற்று. முதலில் அந்த உரிமைகளைக் கொடுக்கிறதாக ஐரோப்பிய அரசர்களுக்கு விளம்பரப்படுத்தி, பிறகு சமாதானம் நடக்குங்காலத்தில் அந்த யுத்த தர்மங்கள் போவர்களுக்கு அன்வயிக்கா என்று ஆங்கிலேயர் சொன்னபோது, ஆங்கிலேயரிடத்தில் போவர்களுக்கு என்னமோ சந்தேகம் பிறந்தது.

போவர் தேசங்களில், நிலம், நீர், கோயில், குளம், தர்மநிதிகள், ஏழைகளுக் கேற்பட்ட நிதிகள் இவற்றைக் காப்பாற்றுகிறோமென்று ஆங்கிலேயர் போதாவுக்கு வாக்குத்தத்தம் பண்ணினார்கள். இதைப் போவர்கள் அனாவசியமென்று நினைத்தார்கள்:—இந்த விஷயங்களில் ஆங்கிலேயர்கள் போவர்களைக் காப்பாற்றாமல் போனால், வேறென்ன ஆங்கிலேயர் செய்யலாம்? எப்போது துரைத்தனம் அவரதாயிற்றோ, இவற்றையெல்லாம் ஆங்கிலேயர் காப்பாற்றித் தானாகவேண்டும். காப்பாற்றாதுபோனால் அது பெருங்கொள்ளையாகும்;—என்று போவர்கள் நினைத்தார்கள்.

**ஆங்கிலேயபாஷை**, **டச்சுபாஷை**, இந்த இரண்டுபாஷைகளையும் பள்ளிக்கூடங்களில் கற்றுக்கொடுத்துத் துரைத்தனத்து நியாயசபைகளில் அந்த இரண்டுபாஷைகளும் வழங்கும்படி ஏற்பாடு செய்வதாகக் **கிச்சனர்** பிரபு சொன்னார். இதைப் போவர்கள் ஒரு இராஜ்யதந்திர யுக்தியென்று நினைத்தார்களே ஒழிய, தமக்கு யாதொரு புதிய சாதகமாக நினைக்கவில்லை.

பயிரிடும் போவர்களுக்குத் தங்கள் கட்டடத்தைத் திரும்பக்கட்டிக்கொள்ளும்படியும், தம்முடைய பயிர்க்குடிசைகளைத் திரும்பச் சீர்ப்படுத்தி விரைகள் வைக்கோல்முதலிய விவசாயக் குறமுட்டுகள் வாங்கிவைத்துக்கொள்ளும்படியும், ஏற்பாடுகள் செய்துகொள்ள உதவிகொடுப்பதாக ஆங்கிலேயர்கள் சொன்னார்கள். இப்படிச் சொன்னவர்கள் அவற்றோடுகூட சில நிபந்தனைகளையும் ஒட்டிச்சொன்னார்கள். அந்த நிபந்தனைகளைப் பார்த்தால், இந்த உதவியைப் பெரிய மனுஷனாய் மானத்தோடு பிழைக்கிற போவர் ஒருவன் தேடிக் கொண்டுபோகமாட்டான் என்று போவர்கள் நினைத்தார்கள்:—ஒரு சபையேற்படுத்தி அந்தச் சபையைக்கொண்டு யுத்தத்தில் குடிகளுக்கு வந்த நஷ்டங்களை விசாரித்து அந்தச் சபையாரின் தீர்மானத்தின்படி நஷ்டங்கட்டிக்கொடுப்பதாக ஆங்கிலேயர் அந்த நிபந்தனையை விரித்துச் சொன்னார்கள். அந்தச்சபையில் போவர்களுக்கு நம்பிக்கை யிருக்காதென்று போதா சொன்னார்.

நம்மிந்தியாவில் இருப்பதுபோல, போவர் நாடுகளில் நெருப்பாயுதங்கள் வைத்துக்கொள்ள வேண்டுமானால், அதற்குத் துரைத்தனத்தாரிடத்திலிருந்து ஒரு உத்திரவுச்சீட்டு வாங்கிக்கொள்ள வேண்டுமென்று ஆங்கிலேயர்கள் ஒரு சமாதான நிபந்தனை சொன்னார்கள். அதற்கும் போவர்கள் ஒப்பவில்லை.

போவர்தேசங்கள் பட்ட கடன்களை ஒப்புக்கொள்வதாக ஆங்கிலேயர் சொன்னார்கள். இது

வும் ஒரு சாதகமன்று; ஏனென்றால், லோகத்தில் நாகரிகமுள்ள இராச்சியத்தார்கள் யுத்தம் பண்ணினால், இப்படித்தான் ஜயசீலர்கள் தோல்வியடைந்தவர்களின் கடனை ஒப்புக்கொள்கிற வழக்கம். இந்த விஷயத்தில் போவர்களுக்கு லாபம் ஒன்றுமில்லையென்று அதையவர்கள் கவனிக்கவில்லை.

போவர் தேசங்களில் * பொறுக்காளிகள் பொறுக்கப்பட்டுஅக்குடிகளால்*பொறுக்காட்சி நடக்கும்படி ஏற்பாடான பிறகு, காபிரிக்குடிகளுக்கும் நாட்டுரிமைகள் கொடுக்கும்படி ஏற்பாடுசெய்யவேண்டுமென்று சொன்னார்கள். அது போவர்களுக்கு இஷ்டமில்லை. அந்த உரிமைகள் காபிரிகளுக்கு ஏற்பட்டால், காபிரிகள் ஆங்கிலேயர்கள் இருவரும் ஒன்றாய் (போவர்) தங்களை துரைத்தனத்தினின்றும் ஒதுக்கி விடுவார்கள் என்று பயப்பட்டார்கள்; ஏனென்றால், ஆங்கிலேயரும், காபிரிகளும் தொகையில் போவர்களைக் காட்டிலும் அதிகமானதால் அவர்களின் செல்வாக்கே துரைத்தனச்சபைகளில் நடந்தேறி வருமே ஒழிய, போவர்களுக்குச் செல்வாக்குண்டாகாது.

**கேப்காலனி, நேடால்,** இந்தப் பிரதேசங்களில் இருந்த **டச்சுக்குடிகள்** சுஜாதி யபிமானத்தால் போவர்களோடு சேர்ந்து ஆங்கிலேயருக்கு விரோதமாய்ச் சண்டை செய்தார்கள். அந்தமாதிரி டச்சுக்குடிகளுக்கு மன்னிப்பு கொடுக்க வேண்டுமென்று போதாச் சேனாதிபதி கேட்

டார். ஆங்கிலேயர் அப்படி மன்னிப்புக் கொடுக்க மாட்டோமென்றார்கள். இந்த நிபந்தனைக்குப்போவர்கள் ஒப்புக்கொண்டால், அதைப் போவர்கள் தமக்கு ஒரு அவமானமாக நினைத்தார்கள்:—ஏனென்றால், "யுத்தகாலத்தில் போவர்களுக்குச் சாதகமாய்ச் சண்டைபோட்ட டச்சுக் குடிகளைச் சமாதானகாலத்தில் ஆங்கிலேயரண்டைகாட்டிக்கொடுத்து அவர்களை யில்லாத ஹிம்சைகளுக்கெல்லாம் ஆளாக்கிப் போவர்கள் மாத்திரம் உயிர் தப்பித்துப் பிழைத்துப்போனால், இதைவிட ஒரு சாதியாரின் பேர் கெட்டுப்போக வேறென்னவேண்டும்?" என்று நினைத்தார்கள். இந்தமாதிரி, ஆங்கிலேயர் மன்னிப்பு கொடுக்க மாட்டோமென்று மறுத்தது ஒன்றேபோவர்கள் மற்றச் சமாதான நிபந்தனைகளைத் தள்ளிப்போட்டு மறுபடியும் துப்பாக்கியைக் கையிலெடுத்துக் கொள்ள முக்கியமான ஏதுவாயிற்று என்று போவர்கள் சொன்னார்கள்.

ராபர்ட்ஸ் பிரபு 24-ஆண்டுகளுக்குமுன் அப்கானிஸ்தானிலும், 23-வருஷங்களுக்கு முன் கிச்சனர் பிரபு எகிப்துதேசத்திலும், என்னமோ கொடுமைகள் செய்து சத்துருக்களை ஹிம்சை பண்ணினார்களாம். அதுபோல, தென்னாபிரிகாவிலும் ஆங்கிலேயர்கள் டச்சுக்குடிகளை ஹிம்சைபண்ண வந்திருக்கிறார்கள் என்று போவர்கள் நினைத்தார்கள்.

ஆங்கிலேயர்கள் தங்கள் இராச்சியத்தில் அங்கங்கே அப்போதப்போது கொடுமைகள்

செய்துவந்தார்கள் என்று கிளம்பினவதந்திகளை இப்போது மனதில் வைத்துக்கொண்டு அவர்களைப் போவர்கள் மகா கொடுமையான துருக்கி தேசத்தாரென்றும், ஆங்கிலேயர் நாகரிகமுள்ள கிறிஸ்துவசாதியா ரன்றென்றும், அவர்களுக்கு முன்காலத்தில் இருந்த பேர் அடியோடு இப்போது கெட்டுப்போயிற்றென்றும் சொல்லிக் கொண்டார்கள்.



## 3-வது கூற்று.

# போவர் மீளவும் போர்க்கோலங் கொண்டது.

கீச்சனர்பிரபு போதாவோடு சமாதானப்பேச்சுகள் சொல்லியும் போவர்கள் சமாதானத்துக்கு வராததுகண்டு போதாவின் மனைவியார் இங்கிலாண்டுக்குத்தம் தேக சௌக்கியத்தின் பொருட்டுப்போவதாகக் கீச்சனர்பிரபுவோடு சொல்லிக் கொண்டார். அவர் அப்படியே உத்திரவு கொடுக்க, அந்தம்மாளும் இன்னொரு போவர்ப் பெரிய மனுஷரும் இங்கிலாண்டுபுறப்பட்டுப்போனார்கள். இங்கிலாண்டில் கப்பலைவிட்டு இறங்கினவுடன் அந்தம்மாளை அநேகம்பேர் "எங்கே இங்கிலாண்டுக்கு வந்தீரம்மா" என்று கேட்க, அந்தம்மாள் "தேக சௌக்கியத்துக்கு வந்தோம்" என்று சொன்னாள். பின்னும், "நீங்கள் சமாதானப்பேச்சு விஷயமாய் வரவில்லையா?" என்று கேட்க, பக்கத்தில் அந்தம்மாள் பின்னோடு வந்த போவர்ப் பெரியமனுஷர் "ஒரு பெண்பிள்ளைதான் சமாதானப் பேச்சுகள் பேசுகிறதோ? கீச்சனராவது, போதாவாவது ஒருபெண்பிள்ளையண்டை அவ்வளவு முக்கியமான சேதியை விட்டுவிடுகிறவர்தானா?" என்று மறுமொழி சொன்னார். பிறகு இங்கிலாண்டில் கொஞ்சநாள் இருந்து ஹாலண்டு நாட்டில் குருகரண்டை வந்துவிட்டார்.

துரைகர் ஹாலண்டு நாட்டில் யூட்ரேச்ட் என்னும் நகரத்தில் வெகு கிழத்தனத்தோடு இருக்கிறார். அவர்க்கு அந்த நகரத்தில் ஒரு அரண்மனையிருக்கிறது. அந்த அரண்மனைக்கு "ஆரஞ்ஜ்லஸ்ட்" என்றுபேர். அதற்கு ஆரஞ்சுநேசம் என்றுபொருள்; ஏனென்றால், ஹாலண்டு நாட்டில் இப்போதைய அரசர்கள் "ஆரஞ்சு" வம்சத்தார்கள்; இப்போது இருக்கிற அரசியாரும் ஆரஞ்சு வம்சத்தார். அந்த வம்சத்தார் தம்மீது நேசம்பூண்டு தமக்கு வந்த ஆபத்துக்காலத்தில் தம்மைத் தம் நாட்டில் இருத்திக் காப்பதால்,அந்தம்மாள் வமிசத்தாரின் பேரைத் தம் அரண்மனைக்கு வைத்துக்கொண்டு அதில் குடியிருக்கிறார்.

இந்த அரண்மனையானது இராஜவீதிக்குச் சற்றுத் தூரத்தில் இருக்கிறது. அதற்கும் வீதிக்கும் நடுவில் இரும்புக் கிராதிகள் போடப்பட்டிருக்கின்றன;அது இருக்குமிடமோ ஒருகுளிர்ந்த சிறுதோட்டம்; நாலுபக்கமும் செடிகளால் வேலி செய்யப்பட்டிருக்கிறது; நடுவில் ஒரு கல்பேடு (Rockery) இருக்கிறது; இதைச்சுற்றி டிரான்ஸ்வால் நாட்டுக் கொடிக்கு அடையாளமாய் ட்யூலிப் (Tulip) என்ற செடிகள் நடப்பட்டிருக்கின்றன; அதன் பூக்கள், சரியாய், அரண்மனையில் துரைகர் உட்கார்ந்திருக்கும் அறையின் சன்னலின் வழியாய், அவர் கண்ணுக்குக்காணும். துரைகர் உட்காருமிடமோ அரண்மனை வலதுபக்கத்தில்கீழ்ப்பாகம்:அது வந்தபேரை வாவென்று அழைக்க ஒரு அறை,படுக்க ஒரு அறை,

ன்னாறு அறை, ஆக இவைகொண்டது. முதல் அறை நேர்த்தியாய்ச் சித்திரவேலைகளால் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றது; அநேக கட்டுமுட்டுகள் நாற்காலி, மேஜை, முதலானவைகள் போடப்பட்டிருக்கின்றன; சுருட்டுத்திரைகளும், சட்டத்திரைகளும் பச்சைவர்ணம் கொடுக்கப்பட்டிருக்கின்றன; அவர் படுக்குமறையும் பச்சை வர்ணத்தால் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றது; சாப்பாட்டறையைப் பார்ப்பவர் அதிருஷ்டமே அதிருஷ்டம்! பலவிதமான இரத்தினக்கம்பளங்கள் பற்பல தேசங்களிலிருந்து கொண்டுவந்துபோடப்பட்டிருக்கின்றன; கறுத்த பச்சைஉடுப்புகள் தநகர் போட்டுக்கொள்வது வழக்கம்; எனினும் மாதிரிப் பச்சையே அதிகமென்றால், அவர் கண் செம்மையில்லாதவராதலால்கண்ணுக்குப் பச்சை வர்ணம் வெகு நல்லது; அவர் நாட்டுக் கொடியும் பச்சைதான்; அவர் உடுக்கும் உடையும் பச்சைதான். இப்போது அவர்க்கு வெகு நேர்த்தியாய்த்தான் கண்கள் இருக்கின்றன.

இந்த அரண்மனையில் மேற்சொன்ன இடம்போகப் பாக்கியிடமெல்லாம் அவர் மந்திரிமார்களுக்கும், காரியதரிசிகளுக்கும் விடப்பட்டிருக்கின்றன. டிரான்ஸ்வால், ஆரஞ்சுநாடு, ஆகிய போவர் நாடுகள் சார்பாய் ஐரோப்பிய நாடெல்லாம் முழு நாட்டாண்மைத் தூதராயிருப்பவரும் (Dr. Leyds) மேற்சொன்ன யூட்ரேச்ட் என்ற நகரத்திலேயே குடிகொண்டிருக்கிறார். ஆகையால், தநகர் எப்போதாவது ஒரு அமைச்சுக்கூட்டம் கூட்

ட வேண்டுமானால், தாம்சிட்டி (Whistle) ஒன்று அடித்தால் போதுமானது. உடனே எல்லாரும் கூடி துருகரண்டை யோசனைக்கு வருவார்கள்.

இந்தத் துருக ரண்டை போதாவின் மனைவி யார் போனார். போதாவும் போவரும் படுங்கஷ்டத்தைச் சொன்னார்; அவர் பக்கத்தில் இருந்த அவர் மந்திரிமார்களும், காரியதரிசியும் போவர் முழுநாட்டாண்மைத் தூதரும் (Boer plenipotentiary), போவர்ச் சமாதானக் கூட்டத்தாரும், இன்னும் பலரும் போதா மனைவியார் சொன்னதை ஏற்றுக்கொண்டு ஒப்புக் கொண்டார்கள். குருகர் மாத்திரம், பைபிளிலிருந்து வாக்கியங்கள் உதகரித்துக்கொண்டும் இரைந்து கத்திக் கொண்டும் அந்தம்மாள் சொல்வதைக் கொஞ்சமேனு மேற்றுக்கொள்ளவில்லை. அந்தம்மாள் "போவர்கள் மிகவும் களைத்துப்போய்விட்டார்கள்; இனிப் போரை வெகு காலந் தாங்குவது கஷ்டம்; ஆபிரிகாவில் போவர்த்தலைவர்கள் சமாதானம் செய்துவிடச் சித்தமாயிருக்கிறபடியால், தாங்கள் அவர்க ளம்மாதிரிச் செய்ய உத்திரவு கொடுக்கவேண்டும்; நமக்கு ஏதுவர வேண்டிய பிராப்த மிருக்கிறதோ அதைத் தள்ளிவிட்டால் உபயோகமில்லை" என்று கேட்டுக் கொண்டாள். இந்த மாதிரிப் போவர்த் தலைவர்கள் அந்தம்மாளண்டைசொல்லி அனுப்பித்ததை வெகுரகசியமாய்வைத்துக்கொள்ளும்படி போதா தம்மனைவிக்கு உத்திரவிட்டார்;அந்த உத்திரவின் படி அந்தம்மாள் நடக்கும்படி அந்தம்மாளுக்கு அநேகம்பேர் காவலிருந்து வந்தார்கள்.

ஐரோப்பாவில் இந்தமாதிரிப் போவர்க் கூட்டத்தார் தலைவிதியே என்று தலையில் கை வைத்துக் கொண்டும் மூஞ்சியைத் தொங்கப் போட்டுக்கொண்டு மிருக்க, தென்னுபிரிக்காவில் சிலநாள் கழித்துச் சுமார் 1901௵ மேமீ-ல் ஆரஞ்சுநாட்டில் ரீட்ஸ் என்னுமூரில் ஸ்டேயின் குடியரசரும் அவர் துரைத்தன உத்தியோகஸ்தர்களும் இருக்கும்போது, ஆங்கிலேயர்க்கு அப்படியிருக்கிறார்களென்றுதெரியவந்தது; உடனே அங்கே ஒரு இராத்திரி போய் அந்த வூரை வளைத்துக் கொண்டார்கள். டிவெட், ஸ்டேயின், இவ்விருவர்களும் இன்னும் சில போவர்களும் தவிர மற்றத் துரைத்தன உத்தியோகஸ்தர்கள் யாவரு மகப்பட்டுக்கொண்டார்கள். ஸ்டேயின்குடியரசர் ஓடிப்போம்போது தன் காகித மூட்டைகளை விட்டுவிட்டுப்போய்விட்டார். அந்தமூட்டையைஅவிழ்த்துப் பார்க்கும்போது அதில் ஒரு முக்கியமான காகிதம் அகப்பட்டது; போதாவும், அவர் துரைத்தனத்துக் காரியதரிசியாகிய ரீட்ஸ் என்பவரும் ஆரஞ்சுநாட்டுக் குடியரசராகிய ஸ்டேயினுக்கு அதை எழுதியிருந்தார்கள்:— "போவர்கள் நம் உத்திரவில்லாமலே ஆங்கிலேயரைச்சரணடைகிறார்கள்; நமக்கோ மருந்துகள், குண்டுகள், பீரங்கிகள் இல்லை; இனி ஒருபெருஞ்சண்டையில் துணிவாயிறங்குவதற்கு எங்களுக்குத் தைரியமில்லை; எங்கள்துரைத்தனமோ இந்தச்சந்தர்ப்பங்களால் நாளுக்குநாள் வலி குறைந்துகொண்டே வருகின்றது; அதை ஒருவரும் ஆதரிப்பார் இலை

யாது; துரைத்தன உத்தியோகஸ்தர்கள் அனாரியப்பட்டு மதிகலங்கித் திகைத்து நிற்கிறார்கள்; ஐரோப்பாவில் இராஜாக்களுக்குள் கலகங்கள் நேரிடுமென்று நாம் எண்ணினது இன்னபொன்றும் நேரவில்லை; ஆகையால் நாமிருவரும் கலந்து பேசிக்கொள்ளும்படி, அங்கிலேயரைச்சற்று யுத்தத்தை நிறுத்திவைக்கச் சொல்லிக் கேட்டுக் கொண்டோம். ஏனென்றால், இந்தமாதிரி வெகு கால மிருக்கமுடியாது; எங்கள் துரைத்தனத்தார்க்கு ஏதோ ஒருவிதமாய் முடிவானகாரியம் ஒன்று நடத்தத்தான் வேண்டுமென்று பணதில்பட்டிருக்கிறது";— என்று அந்தக் காகிதத்தில் எழுதப்பட்டிருந்தது.

இதற்கு ஸ்டேயின் ஆதியாசர் எழுதின பதில் வெகு ஆச்சரியமாயும் வேடிக்கையாயும் இருந்ததும் தவிர அவர் குணமிப்படிப்பட்டது என்று காண்பித்தது:—தாங்கள் சொல்லுவது வாஸ்தவமாயிருக்கலாம்; எங்கள் ஆரஞ்சுநாட்டில் தாங்கள் சொன்னபடியெல்லா மில்லையா? எங்கள் குடிகள் சத்துருவைச் சரண்புக வில்லையா? எங்கள் நாட்டார்க்குப் பீரங்கிகள் இருக்கின்றனவா? நாங்கள் பீரங்கிகள் இல்லாமல் இத்தனைநாள் யுத்தம் நடத்திவருகிறோமே? ஐரோப்பியர்கள் ஒருவருக்கொருவர் கலகம் பண்ணிக்கொள்வார்கள், நமக்குச் சுவாதீனம் கிடைக்குமென்று நாம் முதல் முதல் எதிர்பார்த்ததற்கு இப்போது என்ன விக்கினம் வந்துவிட்டது? தங்களுக்கு அந்தமாதிரிக் கலகம் பண்ணிக்கொள்ளமாட்டார்கள் என்று

என்னமாய்த் தெரியும்? ஏதாவது சங்கதி அந்த விஷயமாய் நமக்கு இதுவரையில் ஒன்று மெட்டவில்லையே? ஐரோப்பாவில் நநகர் முதலான போவர்க் கூட்டத்தார்கள் நம்மை இங்கே மடியவிட்டுத் தாமங்கே சுகித்திருப்பார்களா? முதல்முதல், சிறு சுண்டெலிகளாகிய நம்முடைய இரண்டுநாடுகளும் பெருஞ் சிங்கமாகிய இங்கிலாண்டுடன் என்னமாய் யுத்தத்துக்குக் கிளம்பின? அதற்கு அப்போது அந்நாட்டார்களுக்கு என்ன தைரியமிருந்தது? இப்போது அதற்கென்ன விக்கினம் வந்தது? விக்கினம் வந்ததாக இந்தத் துரைத்தனத்தார்க்கு யாதொன்றும் தோன்றவில்லை. ஆகையால், எங்களைக் கேட்காமல், நீங்கள் ஒன்றும் சத்துருவோடு சமாதானம் பண்ணவேண்டாம்; இப்போது இந்தச் சமயத்தில் நாமொரு சாதியென்று நம் சத்துருவுக்குக் காண்பித்துக் கொள்ளாதுபோனல் பின்னை எப்போது காண்பிக்கவேண்டிய சமயம் நமக்கு நேரிடும்? தங்கள் நாட்டுக்காக எங்கள் நாட்டார்பணம்,உற்றார்,பெற்றார், பிறந்தார், யாவரையுமிழந்தார்கள். இப்போது நீங்கள் சரண்புகுந்தால் எங்கள் நாட்டார்க்குச் சுவாதீனம்போய்விடும். ஆகையால்,தாங்கள் மனந்தளர்ந்து பின்வாங்கவேண்டாம். சுவாமி நம்மைக் காப்பாற்றுவார். முன்னே, முதல் முதல், எப்படிச் சுவாமிமேல் பாரம்போட்டு ஒரு சிம்மத்தோடு நாம் யாவரும் யுத்தத்துக்கு இறங்கினோமோ அப்படியேஇப்போதும் தெய்வம் நம்மைக்கைவிடமாட்டாது.இந்தத் தைரியத்தைத்தங்கள்

நாட்டார்க்குப்போய்ச் சொல்லுங்கள்;—என்று ஸ்டேயின் குடியரசர் பதில் எழுதினர். பிறகு இரண்டு போவர்த் துரைத்தனத்தார்க்கும் இன்னது நடந்தது என்று நமக்குத் தெரியாது. கிட்டத்தட்ட ஒருமாதத்துக்கெல்லாம் போவர்த் தலைவர்கள் நாங்கள் யுத்தத்தைவிடாமல் நடத்தப்போகிறோமென்று ஒரு விளம்பரம் போட்டு நாடெல்லாம் பிரசுரப்படுத்தினர்கள். போதாச் சேனுதிபதியும் போவர்களுக்கு ஒரு பெரிய அதிக் குரூரமான விளம்பரம் போட்டார்.

இந்தப்படி டிரான்ஸ்வால் துரைத்தனத்தார் தம்மால் இனி யுத்தம் செய்யச் சக்தியில்லாது ஆரஞ்சுநாட்டுக் குடியரசருக்கு யுத்தத்தை நிறுத்திச் சத்துருவுக்குச் சரண்புகவேண்டுவது அவசியமென்று எழுதினர் என்ற சங்கதி குரூகருக்குத் தெரிந்தவுடன் அவர் அதை நம்பவேயில்லை; ஏனென்றால், "ஒரு மாதத்துக்குமுன் சக்தியில்லையென்று சொல்லிக்கொண்டு, அப்புறம் யுத்தத்தை நீடித்துக்கொண்டுபோவோமென்று நாடெங்கும் விளம்பரம்போட வல்லமை என் குடிகளுக்கு அதற்குள் எங்கேயிருந்து வந்துவிட்டது?" என்றார்.



## 4-வது கூற்று.

# ஒருவிளம்பரத்தால்போவரை நாடுநீக்கினது.



இந்தப்படி, போவர்கள் பெருமூச்செறிந்து ஆவேசங்கொண்டு யுத்தத்தைக்கைவிடாது நீடித்தே வருவோமென்று சொல்லி, கேப்காலனிக்குள்ளும் நேடால் நாட்டுக்குள்ளும் படை யெடுத்துத் துவம்சஞ்செய்துவந்தார்கள். இந்த இரண்டு நாடுகளிலும் குடிகளுக்குச் சுகமில்லை. மழை விட்டும் துவ்வானம் விடவில்லை என்று போவர்களால் பெருந்துன்பங்கள் நேரிட்டன. அப்போது நேடால் குடியேற்ற நாட்டுத் துரைத்தனத்துக்*குடித்தலைவர் ஒருஏற்பாடுபண்ணும்படி சாம்பர்லேன்துரையை1901ஞு ஜூலைமாசம்கேட்டுக்கொண்டார்:—விரோதச் செயல்கள் வெகு நாள் விடாமல்நடந்துகொண்டுவருவதால்,அதுநேடால் நாட்டுவளம் கெட்டுக்குடிகளுக்கு வெகு துன்பத்தையும் துக்கத்தையும் விளைக்கிறது. போவர்கள் அப்போதப்போது நாட்டுக்குள்புகுந்துகொள்ளையடிப்பதால்,அரசுமீதுநேசமுள்ளகுடிகள் தங்கள் பயிர்ச்செலவுக் குடிசைகளுக்கு வந்து தங்கள்தங்கள் தொழிலை நடத்திக்கொள்ள முடியவில்லை; அவர்கள் சாமான்கள் சேர்க்கச் சேர்க்கப் போ

வர்கள் கொள்ளையடித்துப் போகிறார்கள். இந்தப் போவர் கொள்ளைகளால், பூர்வக் குடிகளுக்குக் கடைகொள்ளவில்லை; வரிவசூலாகிறதில்லை; வர்த்தகம் நாசமாகிறது; * படையாளர்களுக்கே புகைவண்டிகள் யாவும் சரிப் போகின்றன; குடிகளுக்கும் * குடியாளர்களுக்கும் (Civil officers) புகைவண்டிகள் ஒன்றும் உபயோகப்படுகிறதில்லை; ஊரெல்லாம், அடைக்கலம் புகுந்த போவர்களும் டிரான்ஸ்வாலுக்குப் போகவேண்டுமென்று காத்துக்கொண்டிருப்பவர்களும் வந்து அபரிமிதமாகக் கூடிக்கிடக்கிறார்கள்; பயிர்ச்செலவுக் குரிய விலங்குகள், உள்நாட்டுக்குள் இருப்பன, போவர் நாட்டுக்குள் இருப்பன, போவர்நாட்டுக்குள் பிடிக்கப்பட்டு இங்கே கொண்டுவரப்பட்டன, எல்லாம் ஒன்றுசேர்ந்து கூட்டம் கூட்டமாயிருப்பதால் எல்லாம் வியாதிபிடித்து மடிகின்றன; அகிலையுயர்ந்து நாட்டில் பஞ்சம் தோன்றியிருக்கின்றது; நாடானது, வெளிநாடுகளோடு சேதிப் போக்கு வரத்தில்லாமல், படையாளர்களால் நாலுபக்கமும்அடைபட்டிருக்கிறது.நாட்டில்குடியாட்சிச் (Civil) சட்டங்கள்போய்ப்படையாட்சிச் சட்டங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இந்த மாதிரி இருக்கும்போது, என் மந்திரிமார்கள் இப்போது நடந்துகொண்டிருக்கும் குரங்குப்போரை நிறுத்தும்படி வெகு கடினமான வழிகள் செய்யவேண்டும் என்று கண்டிப்பாய்ச் சொல்லுகிறார்கள். இப்போது சண்டைமுனையில் இருக்கும் போவர்கள் எல்லாமிழந்த வக்கற்றவர்கள்; இனி

யவர்கள் இழப்பதொன்றுமில்லை; அவர்கள் நாடிழந்தார், நகரமிழந்தார்; நிலமிழந்தார், நீரிழந்தார்; பொருளிழந்தார், படைத்த நிதியிழந்தார்; உற்றார் பெற்றார் பிறந்தார் யாரும் நம்முடைய காப்பில் வெகு நன்றாய்ப் பிழைத்துவருகிறார்கள்; அவர்களுடைய பயிர்ச்செலவு நிலங்களுக்கு யாதொரு அழிவுமில்லை; ஆகையால், அவர்களுக்கு யாதொரு கவலையுமில்லாமல் சண்டை முனையில் இருக்கத் தைரியங்கொண்டிருக்கிறார்கள்; வரவரக் கொள்ளையாடி அடித்துப்பறித் துயிர்வாழும் வழக்கத்துக்கு வாடிக்கைப்பட்டுப் போகிறார்கள். அன்றி, நம்மைஅடைக்கலம்புகுந்த போவர்க் கூட்டத்தாரண்டை வந்துபேசிப் போகிறார்கள். அதினால், நாட்டுக்கு வெகு அபாயமிருக்கிறது. கலகக்காரர்களல்லாத போவர்களுக்கு "நாம் பிடிபட்டால், நமக்குச்சேதமில்லை; யுத்த முடிந்தால், நம்மை விட்டுவிடுவார்கள்; ஆகையால், நாம் என்னவேண்டுமென்றாலும் செய்யலா"மென்றுதைரியம் கொண்டிருக்கிறார்கள். ஆகையால், போவர்க்குடிகள் இன்னும் கிட்டத்திட்ட ஒருமாதத்துக்குள் படையைவிட்டுப் பணியாதுபோனால் அவர்கள் சொத்துக்கள் பிடிபட்டுத் துரைத்தனத்துக்குச் சேர்க்கப்பட்டு, அந்தச் சொத்துக்களைக்கொண்டு அவர்களுடையபெண்டிர்கள் பிள்ளைகள் அடைக்கலம்புகுந்தார் கூட்டத்தில் (Refugee camps) (இருந்தால்) காப்பாற்றப் படுவார்கள் என்றும், போவர்த்தலைவர்கள் அந்தக்காலத்துக்குள் தங்கள்படையாளிகளான போவர்களைப் பணியும்படி

செய்யாதுபோனால் பிடிபட்டபோது ஆயுள்வரை யில் நாடு துறக்கவேண்டுமென்றும், ஒரு விளம்ப ரம் போட்டுவிக்கவேண்டும். இப்படிச் செய்வதி னால் ஆங்கிலேயச் சேனைகளுக்குப் போவர்களை அடக்கச் சக்தியில்லையென்று நான்சொல்லவரவி ல்லை; அந்தமாதிரிஅடக்கும் வழி மகாகடினமான தென்று யாவர்க்குந் தெரிந்தவிஷயமே; எங்கள் துரைத்தனத்தார் ஏகாதிபத்தியத் துரைத்தனத் தார்க்கு வேண்டியமட்டும் உதவிகொடுப்பதற்குச் சித்தமா யிருக்கிறார்கள்;— என்று எழுதிக் கொண்டார்.

இந்தமாதிரிக் கேட்டுக்கொண்டதின்பேரில், இங்கிலாண்டில் மந்திரிமார்கள் சேர்ந்து ஒரு வி ளம்பரம் சித்தப்படுத்தி கிச்சனர் பிரபுவுக்கு ஜூ லைமாதம் 13உ அதைத் தந்திமூலாய்த் தெரிவித் தார்கள். தெரிவிக்கும்போது, நேடால், கேப்காலனி, இந்தஇரண்டுநாட்டுத் துரைத்தனத்தாரின் அபிப் பிராயத்தையும் தெரிந்துகொண்டு, பிறகுஅதைப் போவர் நாடுகளில் பிரசுரப்படுத்தவேண்டுமென் று கேட்டுக்கொண்டார். அப்படியே கிச்சனர் பி ரபு செய்தார். அந்த விளம்பரத்தில் முக்கியமா னவை என்னவென்றால், "செப்டம்பர் மாசம் 15உக்குள், அல்லது அந்தத்தினத்திலேயே, போ வர்களும் போவர்த்தலைவர்களும் படைகளைக் கை விட்டு ஆங்கிலேயர்க்குத்தலைவணங்காதுபோனால், ஆங்கிலேயர்கள் அதற்குப் பிறகு போவர்களை யுத்தகட்சிக்காரராய் எண்ணி யுத்த தர்மங்களை அவர்கள் விஷயத்தில் அநுசரிக்கமாட்டார்கள்; அதற்குப் பிறகு அகப்பட்டவர்கள் இரசாக்கி

னைக்கு ஆளாவார்கள்; ஆயுசு வரையில் தேச பிரஷ்டமாவார்கள்; அவர்கள் சொத்துத்துரைத் தனத்தார்க்குச் சேர்க்கப்படும்'' என்பன; மேலே நேடால் நாட்டார் எடுத்துச்சொன்னவை யெல்லாம் சற்றேறக்குறைய அதில் அடங்கியிருக்கின்றன.

இந்த விளம்பரத்தைப் பார்த்துவிட்டுக் குருகருக்கு மகா கோபம் வந்துவிட்டது. இந்தச் சமயத்தில் ஒருஆங்கிலேயன் இந்த விளம்பரத்தைப் பற்றிக்குருகரின் அபிப்பிராயத்தைக் கண்டறிய அவர்சேவைக்கு ஹாலண்டுக்குப்போனான். அவர் அவனிஷ்டப்படி சேவை கொடுத்தார். அவரண்டைபோனவுடன் கிச்சனர் பிரபு பிரசுரப் படுத்தின விளம்பரத்தைப்பற்றித்தங்களுக்கு ஏதாவது தடையிருக்கும் பக்ஷத்தில், அது * பலநாட்டுப் பொதுச் சட்டத்தைத்தழுவியிருக்கிறதா? என்று கேட்டார்.

குருகர் உடனே அவனைப்பார்த்துத் திகைத்து நின்று''என்ன? இன்னொருதரம் அந்தக்கேள்வியைச் சொல்லுங்கள்'' என்றார்.

சேவைக்குப் போனவன், கிச்சனர் பிரபுவின் விளம்பரத்தைப் பற்றித் தங்களுக்கு ஏதாவது தடையிருக்கும் பட்சத்தில், அது பலநாட்டுப் பொதுச் சட்டத்தைத் தழுவியிருக்கிறதா என்று மறுபடியும் சொன்னான்.

குருகர் உடனே தம் பெருந் தேகமெல்லாம் உதறிக்கொண்டு தள்ளாடி நின்றார்; கண்ணைமூடிக்

கொண்டார்; இடது கைக்குள் வலது கையைப் போட்டுக் கைகளைப் பிசைந்து கொண்டார்; பிற்பாடு நாம் பாட்டுப் பாடும்போது மத்தியில் நிறுத்தியும் விடாமலும் உரக்கவும் மெல்லவும் பாடுகிறாப்போலக்கத்துகிறதற்குத் தொடங்கினார்:—என்ன! பன்னாட்டுப் பொதுச் சட்டமா! நான் ஒன்றும் அச்சட்டத்தில் புலவனன்று; ஆனால் மக்கட்சாதியார் ஒவ்வொருவரும் துவக்கத்தில் தாமே தெரிந்து கொள்ளும் சட்டத்துக்குவிரோதமாய் அந்தச்சட்டம் இருக்காது; அப்படிவிரோதமாய் இருக்குமானால் மனுஷர்கள் தங்கள் வீடுவாசல்களுக்கும் குடும்பங்களுக்கும் நாட்டுக்கும் காப்பாகச் சண்டை போடும்போது அவர்களுக்கு நேரிடக்கூடிய பயங்கரமான மோசநாசங்களுக்குச் சேர்க்கையாய், எரிகிற உடம்பில் எண்ணெயை ஊற்றினாற் போல, சத்துருக்கள் அந்தச்சட்டமாதாரமாகக் *கேள்வி முறையில்லாத கஷ்டங்களையும் தண்டனைகளையும் கூடச்சேர்ப்பதில் தடையில்லை. உங்கள் துரைத்தனத்தார் முதல் முதல் போவர்களை யுத்தகட்சியில் ஒரு கட்சியாக ஒப்புக்கொண்டார்கள்; இப்போது இந்த விளம்பரத்தால், சாத்தியப் படும்போது அவர்களைச் சுட்டுவிடலாமென்றும் பிடிபட்டபோது கலகக்காரர்கள் போல நடத்தலாமென்று மர்த்தமாகிறது; அன்றி, அவர்கள் மனதில் தாம் எதிர்க்க எதிர்க்கத் தம் பெண்டிர்கள் பிள்ளைகளுக்குத் தொந்தரவு அதிகரிக்கிறதென்று ஒரு எண்ணமுண்டாக்கி, மனது குன்றும்படிச் செய்கிறார்கள்; இதுதான் பன்னாட்டுப் பொதுச்

சட்டமோ? அப்படியானால் அப்பன்னாட்டுப் போதுச்சட்டத்துக் காளாகாம லிருப்பதே நல்லது; ஏனென்றால், அப்படியதற்காளாகாமற் போனால், அவரவர்கள் தம்தம் வீடுவாசல்நாடுநகரம் குடித்தனம் குடிவாக்கு எல்லாவற்றையும் காக்கலாமே இல்லையோ! அதுக்கு ஒருவரும் தடைசொல்லமாட்டார்கள்; சண்டைமுனையிலேயே அப்போது நாகும்படிநேரிடும்; செத்தாலும், வெளிப்படையாய் யுத்தம் செய்து படாதபாடும் அடையாதநஷ்டமும் பட்டபிறகுங்கூட, அவர்கள் கலகக்காரர்களென்று அவர்கள்மேல்ஒருகுற்றஞ்சாட்டி அவர்களைத் தேச பிரஷ்டம் செய்ய மாட்டார்களல்லவா?

**சேவைக்குப் போனவன்;**—ஆனால் விளம்பரத்தின் தொடக்கத்தில் இப்போது போவர் நாடுகளில் எல்லாம் நிலைமாறிப் போயின வென்றும் அதினால் சரியான யுத்தம் நடக்கிறதில்லை என்றும் வெறும் குரங்குச் சண்டைதான் நடக்கிறதென்றும் அந்தக் குரங்குச் சண்டையை நிறுத்த வேண்டி இந்த விளம்பரம் போடப்பட்டதென்றும் சொல்லுகிறார்கள்.

**துநகர்;**—உங்கள் துரைத்தனத்தார் மனதுமாறிற்றேயன்றி, போவர் நாட்டில் ஒன்றும்நிலைமாறவில்லை; முதல் முதல் நாங்கள் என்ன யுக்திகள் காட்டினோமோ அதே யுக்திகள் இப்போதும் காட்டுகிறோம்; நீங்கள் முதல் முதல் அவற்றைப் * படையாளரின் யுக்திகள் என்றீர்கள்;

இப்போது அவற்றை நேரும் கூறுமில்லாத குரங்குத் சண்டை என்கிறீர்கள். போவர்கள் செய்வதெல்லாம் தம்மைக் காக்கும்படி வேண்டிய யுக்திகள்; அவற்றைப்படையாளர்களில் வெகு திறமையும் யுத்தப் புலமையு முள்ளவர்கள் எங்கேயும் ஒப்புக் கொள்கிறார்கள்; ஆங்கிலேயரும் எங்கள் நிலைமையில் இருந்தார்களானால் அவ்வாறே செய்வார்கள்; ஆங்கிலேயருக்கு மிஞ்சி சத்துருக்கள் சேனைகளைக் கொண்டுவந்து அவர்களைத் தாக்கி "ஆங்கிலேயர்கள் இனி எதிர்த்தால், அது கலகம் பண்ணுவதாக எண்ணப்படு"மென்றுசொன்னால், ஆங்கிலேயர்க்கு மனது என்னமாயிருக்கும்?

சேவைக்குப் போனவன்;—ஆனால் ஆங்கிலேயத் துரைத்தனத்தாரின் எண்ணமென்ன?

தூநகர்;— நான் ஒருவர் மனதில் புகுந்து உள்ளத்தை ஆழம்பார்க்கிறவனன்று; அந்த வேலை சுவாமி செய்வார்; நான் மனிதர் செய்கைகளையும் நடவடிக்கைகளையும் பார்த்து நியாயம் சொல்லப்பட்டவன்; ஆங்கிலேயர்மேல் நாங்கள்குற்றஞ் சாட்டும் குற்றங்கள்யாவும் இந்த லோகத்தார் கண்முன்செய்யப் படுகின்றன; அந்த லோகத்தாரே அதைப்பற்றி நிந்தனையாய்ப் பேசியிருக்கிறார்கள்; ப்ளூம்பாண்டீன் பிடிபட்ட நாள்முதல் ஆங்கிலேயர்கள் பன்னாட்டுப் பொதுச் சட்டத்தைக் காலால் இடறிக்கொண்டே போகிறார்கள்; அது ஒரு சட்டமே, அதின்படி நாம் நடந்துகொள்ளக் கடமைப் பட்டிருக்கிறோமே என்ற ஞாபகமே

ஆங்கிலேயர்க்குக்கிடையாது; எங்கள் பயிர்ச் செலவுக் குடிசைகளை எரித்து விடுகிறார்கள்; குடித் தனங்களை அக்கக்காய்ப் பிரித்து விட்டார்கள்; இப்போது எங்களையே குற்றவாளிகளாக நடத்துகிறார்கள்; போவர் சாமான்களையும் ஆகாரங்களையும் ஆடுமாடுகளையும் ஆங்கிலேயச் சேனைகள் பிடித்துக் கொண்டால், இங்கிலாண்டில் பத்திரிகைகள் வெகு சந்தோஷங் காண்பிக்கின்றன; அந்தச் சாமான்கள் முதலானயாவும் என்ன, உங்களுக்குத் தெரியுமா? நீங்கள் என்னமோ அவற்றையுத்தத்தில் நடக்கும் வழக்கமான செய்திகள் என்று நினைக்கிறீர்கள்; அது தப்பு, ஏனென்றால் எங்கள்படைகளுக்குச்சாமான்கொண்டுபோவதற்குமனுஷர்கள் பிரத்தியேகமாய் ஒருவரும் ஏற்படவில்லை;எல்லாரும்கைக்கு அகப்பட்டதைத்தின்று சீவிக்கிறார்கள்; போவர்ப்படைகளுக்கன்று,மேற்சொன்ன சாமான்கள் முதலியன; அவையாவும் அப்போவர்களின் பெண்டிர்களுக்கும் பிள்ளைகளுக்குந்தான்; இவற்றை ஆங்கிலேயர் பிடித்துக் கொண்டால், அப்பெண்டிர் பிள்ளைகள்தான் கஷ்டப்படுவார்கள்.

**சேவைக்குப் போனவன்;**—போவர்ச் சேனைகள் மிகவும் குறைந்து போயின. அந்த விளம்பரம் போடுவதற்கு இதுவும் ஒரு முக்கியமான காரணம். அப்படி யிருக்கும்போது, இப்போது போவர்கள் செய்யும் யுத்தம் நேரும்கூறுமான தென்று சொல்லலாமா?

ஜூகர் வெகு கோபத்தோடு இடி இடித்தாற்போல் இரைந்துகொண்டுபேசினார்:—நேருங்கூறு மன்று? யார் சொன்னது? பின்னே, நேருங் கூறுமான சண்டை எப்படி இருக்கும்? மேற்சொன்ன ஏற்பாட்டைச் சரியாய், ஒரு கோணலுமில்லாமல், ஆங்கிலேயரால் நடத்தமுடியுமா? அப்படியானால், ஒரு நேருங்கூறுமான சண்டைக்கு எவ்வளவு பேரிருக்கவேண்டும்? நேருங்கூறுமான யுத்தத்துக்கு எவ்வளவு சரியான சண்டைகள் நடக்கவேண்டும்? இப்படிப்புதியமாதிரியாய் யுத்தத்தை ஆராயுமிடத்து, இதற்குமுன்னால் இந்தமாதிரித் தைரியமாய்த் தம் பிறவி நாட்டுக்காகச் சனங்கள் எவ்வளவு யுத்தங்கள் செய்திருக்கிறார்கள்? எங்களுடைய படையின் தொகையோ இப்போது கொஞ்சந்தான்; ஆனால், அப்படைகள் ஒருபோதும் உங்கள் படைபோல அபரிமிதமாயிருந்ததில்லை. இதுதான் இந்தயுத்தத்திலிருக்கிற ஆபத்தெல்லாம்; முன் இருந்ததைக்காட்டிலும் இப்போது கொஞ்சந்தான். அப்படிக் கொஞ்சமாயிருக்கிறது எங்களுக் குற்றதலைவிதி; போவர்கள் தொகையில் சிறியவராயினும், படைக்கு வேண்டிய அமிசங்களில் ஒன்றும் குறைவில்லை. படைகளுக்குமேல், தலைவர்கள்; தலைவர்களுக்கு மேல், சேனாபதிகள்; சேனாபதிக்குமேல், சேனாபதித்தலைவர் போதா; இது சரியா தப்பா என்பது பற்பல சண்டையின் பலன்களே சொல்லும்; வினாக்பாண்டீன் சண்டை நேருங்கூறுமன்று? ப்ராங்கர்ஸ்ப்ருட் சண்டை நேருங்கூறுமன்று? நே

ருங்கூறுமல்லாமல் எங்களுக்கு ஜயம் என்ன மாய்க் கிடைத்தது? நீங்கள் சொல்லுவதை நான் கொஞ்சமும் ஒப்பமாட்டேன். நாங்கள் செய்யும யுத்தம் வெகுசரியான யுத்தம். இந்த யுத்தம் சரி தப்பு என்பது, எங்களை எதிர்த்து நிற்கும் சேனை யே சொல்லும்.

**சேவைக்குப் போனவன்;—** போவர்க் குடிக ளில் பெரும்பாலார் சமாதானத்துக்கு ஆசைப் படுகிறார்கள் என்று ஒப்புக்கொள்வீர்களல்லவா? அவர்கள் **எட்வர்ட் மகாராஜாவின்** துரைத்தனத் துக்குக் கீழ்பட்டுப் போயிருக்கிறார்களே? அதே அவர்கள் சமாதானத்தை நாடியிருக்கிறார்களென் று சாட்சியாய் நிற்காதா?

**குருகர்;—**நானொன்றுமப்படி ஒப்புக்கொள்ள மாட்டேன்; நான் ஒப்புக்கொண்டால் அது இப் போது நாம் வழக்காடும் விளம்பரத்தினாலேயே பொய்யென்றுஏற்படும்; இருக்கிறவாஸ்தவமுமப் படிக்கானிருக்கிறது. இந்த விளம்பரமானது எங்கள் துரைத்தனத்தாரையும் படைகளின் உத் தியோகஸ்தர்களையும் தேச பிரஷ்டம் செய்வ தாகப் பயமுறுத்திற்று. இதனால், கிச்சனர் பிரபு வின்படி, எங்களுக்கு நேருங்கூறுமான சைனிய மிருக்கிறதென்று ஏற்படுகிறது. இப்படியிருக்க, நாங்கள் வழிப்பறிக்கிகள் என்று என்னமாய் ஆங்கிலேயர் சொல்லலாம்? 250 ஆயிரம் சேனைக் கு வேலைவைக்கும்படியாய் எங்களிடத்தில் படை யாளிகள் இருந்தால், சிறையாளிகள்போல நாட் டுக்கு வெளியில் பிரஷ்டர்களாய்த் தின்னச்சோ

றில்லாமல் அநேகாயிரம்போவர் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தால், போவர்க்குடிகளில் பெரும் பாலார் சமாதானத்தின்பேரில் கண்ணுய்ச் சண் டையை நிறுத்திவிட இஷ்டப்படுகிறார்கள் என்று என்னமாய்ச் சொல்லலாம்? நீங்கள் சொல்வது சுத்தப் பிசகு; சுவாமி மக்களுக்குக் கொடுத்த இன்பத்தைக் கைவிடாதிருக்கும்படி எவ்வள வோ கஷ்டப்பட்டுக்கொண்டு என்னவேண்டுமா கிலும் தியாகம்பண்ண அவர்கள் சித்தமாயிருக்கி றார்கள்; அந்த இன்பங்களில் தானாட்சியென்பது முதலின்பம்; மற்றவையெல்லாம் அதற்கப்புறந் தான்.

**சேவைக்துப் போனவன்;**—இந்தவிளம்பரத் தைப்பற்றி ஏதாவது தடைசொல்லி மாறு விளம் பரம் போடப்போகிறீர்களா?

**துநகர்;**—மாறுவிளம்பரம் இன்னும் யோச னையில் இருக்கிறது. துரைத்தன * விசையின் உறுப்பாளிக ளெல்லாரும் தென்னாபிரிகாவில் யுத்தகளத்தண்டை இருக்கின்றனர்; இங்கேநாங் கள் என்னசெய்தாலும் அது அவர்களுக்குக்கணக் கில்லை; அவர்களுக்குத் தோன்றினதை அங்கே சமயத்துக்குத் தக்கபடிச் செய்வார்கள். போவர் களாகிய நாங்கள் சுவாதீனமடைந்த ஜனங்கள்; எங்கள் வீட்டுக்கும் நாட்டுக்குங் கடைசிவரை யில் சண்டை போடும் உரிமை ஒன்று எங்களுக்கு வாய்ந்திருக்கிறதென்று ஆங்கிலேயர் கொஞ்ச மும் யோசிக்காமல் இந்த விளம்பரத்தைப் பிரசு ரப்படுத்தி லோகத்தில் இதுவரையில் செய்யாத

தப்புஒன்றை அவர்கள் எங்கள் விஷயத்தில் நடத்தியிருக்கிறார்கள். எங்களுக்குண்டான தானாட்சியை கி - பி. 1852-ம் ஆண்டில் நாங்கள் படைத்தோம். உங்கள் துரைத்தனத்தார் இரண்டு வருஷம் கழிந்தபிறகு அதை ஒப்புக் கொண்டார்கள்; உங்கள் சாதிச்சனங்கள் யாரும் 40 - வருஷங்கழித்து அதை உலகமெலாம் பிரசுரப் படுத்தினார்கள். இதோடுகூட நீரும்பாலும்போல் •பிரிக்கப் படாமல் கலந்திருக்கும் உரிமையானது நாங்கள் படைத்த அத்தானாட்சியைக்காக்கு முரிமை; இப்போது என்னவென்றால், மக்களின்பத்துக்கு முதல்படியான (Elementary) அந்த உரிமையே எங்களுக்கு இல்லாதது போல், எங்களை ஆங்கிலேயா நடத்துகிறாகள. இது ஒரு தபபு, கடுமையான தப்பு, அந்தத் தப்புக்கு யாதொரு சாக்கும் சொல்லமுடியாது.

இப்படிச்சொல்லி முடித்தவுடனே கிழவருக்குக்குரலெல்லாம் நடுக்கமுற்றுப்போயிற்று; வலதுகையை இடதுகையில் போட்டுக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு நடுக்கமுறப் பிசைந்தார்; அவருக்குண்டான மனக் கொதிப்பால், உடம்பிற் பிரக்ஞை இல்லாமலேபோயிற்று.

**சேவைக்குப் போனவன்;**—கடைசியாய் ஒரு பேச்சு பேசிவிட்டுப் போகலாமென்று நினைத்து "தங்கள் இருவருக்கும் யுத்தம் உண்டானதைப் பற்றி என்னவேண்டுமானாலும் சொல்லுங்கள். ஆங்கிலேயரென்னமோ, தங்கள் ஏகாதிபத்தியமானது தென்னாபிரிகாவில் இந்தயுத்தத்துக்குத்

தப்பிப் பிழைத்து வெளிவரவேண்டுமேயென்று ஆவலுடன் யுத்தம் நடத்துகிறார்கள்.

தநகர் "ஆம்! ஆம்!! இந்த இரண்டு குடியரசுகளும் சேர்ந்து ஆங்கிலேயரைத் தென்னுபிரிகாவை விட்டுத் துரத்திவிடப் போகின்றன என்று ஆங்கிலேயர் நினைத்துக்கொண்டிருக்கும் பழைய பொய்க்கதை எனக்கு நன்ருய்த் தெரியுமே". என்று கண்ணைமூடிக்கொண்டு கைகளைத் தூக்கிக்கொண்டு, (பூஜிக்கத்தகுந்த ஹீப்ரு ஜாதியான்)ஒருவன்குறிசொல்லுவதுபோல பேச்சுகள் பேசிக்கொண்டு சொன்னுர். பிறகு, சற்றுநேரம் கழித்து, பின்னும் அதிக ஆவேசத்துடன் பேசத்தொடங்கினுர்:— "அந்தக் கலகக் கூட்டுயோசனை (Conspiracy), ஒரு பெரும்புளுகு, வெறுக்கக்கூடிய கடும்புளுகு. இங்கே சர்வ வல்லமையுள்ள கடவுள் முன்பாக அது புளுகென்று பின்னுஞ் சொல்கிறேன். இந்தப் புளுகால், இரத்தவெள்ளமுண்டாய், நாடெல்லாம் நாசமடைந்தது. நான் சொல்வது மெய்யோ பொய்யோ சுவாமிக்கே தெரியும்; இந்தப் பூமண்டலத்தில் ஸாலிஸ்பரீப் பிரபுவும் சாம்பர்லேன் துரையுமே எனக்குச் சாட்சிகள்; நான் சொல்வது மெய்யென்று அவர்களுக்கு நன்ருய்த் தெரியும்; ஏன்! எனக்குத் தெரிந்ததெல்லாம் அவர்களுக்குந் தெரியும். இந்தப் பூமண்டலத்தில் மானவசிருஷ்டி யானது முதல்,இந்தமாதிரிகிருத்திரமமுமளழிந்து போட்டதுமான பொய் ஒருவரும் கல்பிக்கவில்லை. கடவுள் சிருஷ்டியில் தென்னுபிரிகாவில் இழைக்கப

பட்டசொல்லக்கூடாதநாசத்தைக்கடவுளே திருத்தக்கூடியவர்; அந்தநாசம் வாராமல் தடுக்கப்பார்த்தோம்; நாங்கள் சமாதானம்வேண்டினேம்; சமாதானம் நாட்டி நாடுகாக்கவழிகளைத்தேடஆவலாயிருந்தோம்; இரத்தம் வீணே கழியுமே என்றும அதினல் அனர்த்தம் வருமே என்றும் பயந்து நாங்கள் ஆங்கிலேயர் கேட்டது கொடுத்தோம். ஆயினுமிந்தப்படி நாங்கள் பட்ட கஷ்டமெல்லாம் சாம்பலில் செய்த ஆகுதியாயிற்று. அந்தப் பொய்யானது படாதபாடும்படுத்தி அடாதகேடும் படைத்திருக்கிறது; அந்தக் கேட்டைத் திருத்த இப்போது மனுஷனல் சாத்தியமல்ல; ஆயினும் சமாதானம் உண்டாவது அசாத்தியமன்று; போவர்க்கும் பிரிடனுக்கும் தென்னுபிரிகாவில் தோழமையுண்டாவதும் சாத்தியந்தான். அந்த அமரிக்கைவேண்டுமென்று இரண்டு வருஷங்களுக்கு முன்னும் கோரினேன், இப்போதும் கோருகிறேன். சமாதானத்துக்கு வழி இரண்டுவருஷத்துக்கு முன்னலேயே கண்டுபிடித்திருக்கலாம்; இப்போதும் நீங்கள் இச்சித்தால் நடக்கும்; நாங்கள் என்னமோ வெகு ஆவலாய்த்தான் இருக்கிறோம்; அந்த ஆவலை நாங்கள் உங்களுக்குக்கொடுக்கும்படிமுன் ஒப்புக்கொண்ட உரிமைகளாலேயே தெரிந்துகொள்ளலாம். நாங்கள் மறுபடியும் அந்தமாதிரிச் சித்தமாயிருக்கிறோம். நாங்கள்*"கொடுத்துவாங்கு" என்றகொள்கையை மேற்கொண்டு சமாதானம்செய்ய இஷ்டப்படுகி

கொடுத்துக் கலகக்காரர்களுக்கு மன்னிப்பும் கொடுத்தால், தென்னாபிரிகாவில் அசையாத அமரிக்கை நிலைக்கும் என்பதில் சந்தேகமில்லை. இல்லாவிடில் சமாதானம் நிலைக்காது. இரத்தத்தைக் கீழே வார்த்துத்தானா மக்களுக்கு வேண்டியது நாம் படைக்கவேண்டும்?



## 5 - வது கூற்று.

# ரோஸ்பரிப்பிரபு மத்தியஸ்தம் பேசியது.

இப்படித் தூதர் சொல்லக்கேட்டு, இங்கிலாண்டில் அமைச்சர்களுக்கு எதிர் கட்சியான நாடு ஒடுக்கித்தழுவும் கட்சியார் போவர் பக்கம் வெகு சார்பாகப் பேசினார்கள்:—"போவர்களைத் தேசபிரஷ்டம் பண்ணக்கூடாது; அவர்களை முதலில் யுத்த கட்சியில் ஒருவராகச் சேர்த்துக்கொண்டு, பிறகு இப்படிச் சேர்க்க மாட்டோமென்று சொல்லுவதுபிசகு, அதர்மம்" என்று அமைச்சர்களைக் கண்டித்துப் பேசினார்கள்; இதல்லாமல், கேப்காலனியில் யுத்த காலத்துப் * படையாட்சிச்சட்டங்கள் வழங்கிவருவது நாட்டில்அரசமைக்கப்பட்டிருக்கும்சட்டத்துக்கு மிக விரோதம்;அச்சட்டங்கள்*நெறிச்சபைகளில் செல்லா ; யாராவது ஒரு ஆங்கிலேய நாட்டுக் குடியை யுத்தத்திலாவது, வேவுகாரனையாவது, படையாளிகள் சண்டைகள் நடத்திக்கொண்டிருக்கும் போதாவது கொல்லாமல் இராஜத் துரோகம், இன்னு மிதுபோன்ற குற்றங்கள் செய்தானென்று பேருக்குமாத்திரம் விசாரணை ஒன்று நடத்திவிட்டுக் கொன்றால், அப்படிக் கொன்றவன், அப்படிக் கொல்லும்படி தீர்ப்புச் சொன்ன

வனை, அப்படிக்கொல்வதற்குஉதவியாயிருந்தவன், எல்லாரும் கொலைக்குற்றஞ் சாட்டப்பட்டு நெறிச்சபைகளில் விசாரிக்கப்பட ஆளாவார்கள்; (2) மேற்சொன்னபடி யாராவது விசாரணைக்குக் கொண்டுவரப்பட்டால், தன்னுட்டாருள் அந்த நெறிச்சபைக்குச சேராத பெரிய மனுஷர்கள் சிலர் * நெறியாளிகளாய் நெறிச்சபைக்குத் தனபொருட்டு நியாயாதிபதிக்கு உதவியாய் (நெறிச்சபையாராணையின்படி) வந்த காலத்தில்; அந்நெறியாளிகளுக்குத்திருப்தியாய் தான்செய்த கொலையானது நல்ல எண்ணத்துடன், யுத்தசாதகத்துக்காக, யுத்தத்தை நடத்தும் பொருட்டே செய்ததாயும், பழிவாங்குமெண்ணத்தோடாவது, குடிகளைப் பயமுறுத்துவதற்காவது, * குடியாட்சிச்சட்டங்(நாட்டைஆளுவார்குடியாக ஆளும்ஆட்சிக்குரிய சட்டங்)களைநீக்கிப்படையாளர்களே தமமிஷ்டப்படிநாட்டையாளுங்கருத்தைக்கொண்டாவது தான் அந்தக்கொலையைச் செய்யவில்லையென்றும் திருப்தியாய் மெய்ப்பிக்கவேண்டும். அப்படி மெய்ப்பித்தாலன்றி, அவன் படையாளி யாகட்டும், * குடியாளனுகட்டும், படைத் தலைவனுகட்டும், * குடித்தலைவனுகட்டும், யாராயிருந்தாலும் கொலைக்குற்றத்துக்காகத் தண்டிக்கப் படக் கடவன்; (3) மேற்சொன்னபடி பரிகாசம் போலப் பேருக்குமாத்திரம் விசாரணை நடத்தின ஒரு * படைச்சபையார் * குடியாட்சிக்குரிய உரிமை [illegible] மேற்சொன்ன [illegible] காவல், தண்டனை [illegible] விதித்தால், * படைச்சபையாரின் நடவடிக்கை

கள் செல்லா, அன்றி, குற்றங்களுமாகும். அப்படி விதித்த தண்டனைகளை நிறைவேற்றும்படி படையாளி, குடியாளன், * நெறியாளன், * குற்றம் பிடிப்பவன், யாராகட்டும் முயற்சி செய்தானே யானால்; அல்லது, மேற்சொன்ன தண்டனையடைந்த ஒருவனைப் பிடித்தாகிலும், விசாரித்தாகிலும், சிறையிலடைத்தாகிலும் தொந்திரவு செய்தால்; அப்படிப்பட்டவர்கள் யாவரும் குற்றவாளியாவார்கள்—ஆக இந்தமாதிரி, கிச்சனர் பிரபு தென்னாபிரிகாவில் கேப்காலனியிலும், நேடாலிலும் குடிகள்மேன்மேலும் கலகம்பண்ணாமல்இருக்கும்படிச்செய்த ஏற்பாடுகளை ப்ரெடெரிக் ஹாரிஸன் துரை போன்ற கைகாரச் * சட்டவாளிகள் நிந்தித்துப் பேசிவந்தார்கள்.

இப்படிப் பேசிக்கொண்டுவந்த ஜான் மார்லி துரைபோன்ற போவர் சார்பாரான ஆங்கிலேயர் அநேகரை நம்பிக்கைத் துரோகிகள் என்றும்; இப்படிப் பேசுவதால் சத்துருவான போவர்களை இன்னும் போரை நீடித்து வரும்படித் தூண்டி விடுகிறதுதான் பலனென்றும்; இங்கிலாண்டில் அமைச்சுபுரியும் நாடு நடக்கிக்கட்டும் கட்சியார் நிந்தித்துஇங்கிலாண்டின் குடிகளுக்கு அங்கங்கே இகழ்ந்து காட்டிவந்தார்கள்.

அப்போது,அமைச்சுபுரிவார்க்கு எதிர்கட்சியான நாடு ஓங்கித்தழுவும் கட்சியார் "நாங்கள் நம்பிக்கைத்துரோகியா, அமைச்சுபுரிவார் நம்பிக்கைத் துரோகியா? இங்கிலாண்டின் குடிகள் எங்

தக் கட்சியண்டை நாட்டின் க்ஷேமம் மேன்மே லும் வளர்ந்துகொண்டுவரும்படி நம்பிக்கை வைத்திருக்கிறார்கள்? அந்த நம்பிக்கைக்கு வி ரோதமாய் இந்த யுத்தத்தை மூட்டிக் கிளப்பி வாரமொன்றுக்குச் சற்றேறக்குறைய 60 லட்சம் பவுன் தென்னாபிரிகாவில் செலவாகும்படிச் செய்து இராஜ்ஜியத்தை வீணே கெடுக்கிறவர்கள் யார்"? என்று மாறுவழக்குப் போட்டுத் தாங் களும் அமைச்சர்களைப் பதிலுக்குப் பதில் நிந் தித்து வந்தார்கள். பின் சொல்லியபடியும் அமைச் சர்களை இகழ்ந்து பேசினார்கள்:—

"போவர் சார்பார்கள் (Pro-Boers) அடிக் கடி நம்பிக்கைத் துரோகிகள் என்று சொல்லப் படுகிறார்கள்; அப்படிச் சொல்லப்பட்டவர்களுக் கு அந்தப் பட்டப்பேர் வெகு ஆச்சரியமாய், நம் பிக்கைத்துரோக மென்றாலென்ன என்று தமக் குத்தாமே ஆராய்ந்து தேறத் தலைப்பட்டார்கள்; ஏனென்றால், நாமெடக்கிக் கட்டும் அமைச்சுக் கட் சிக்குச் சேர்ந்தவர்களே சிலர்பத்திரிகைகள் போ டுகிறார்கள்; அவர்களையே நாமெடக்தவார் நம்பிக் கைத் துரோகிகள் என்றால், அந்த வார்த்தைக்கு ஏதோ ஒருவிசேஷ அர்த்தமிருக்கவேண்டும்! நாங் கள் அமைச்சுபுரிபவர்களின் யுத்த நடவடிக்கைக ளைப்பற்றித் தூஷித்துப்பேசினால் எப்படி நம்பிக் கைத் துரோகிகளாவோம்? நாங்கள் சட்டத்துக் கு விரோதமாய்ப் பேசவில்லை; இப்படிப் பேசாது போனால் இராச்சியத்துக்குக்கேடுவருவதாக எங்

களுக்குத் தோன்றுகிறது; இப்படியெல்லாம் பேசிவருவதால் நம் சத்துருவாகிய போர்வர்கள் தைரியங்கொண்டு யுத்தத்தை நிறுத்தாமல் நீடித்துவருகிறார்களென்று அமைச்சர்மார் சொன்னால், அப்படி நாங்கள்பேசுவதால்சத்துருவுக்குத் தைரியம் வரவில்லை; அப்படிப் பேசாமல்போனால் தான்நம்பிக்கைத்துரோகமாகும்: இராச்சியமெல்லாம் யுத்தத்தைப்பற்றி உண்மை தெரியாமல் ஆவேசத்தால் ஒருவர் மண்டையை ஒருவர் உடைத்துக்கொண்டிருக்கும்போது தெரிந்தவர்கள் தெரிந்ததைவெளிவிட்டுப் பேசிக் கூடியமட்டில் அரசைக் காக்காது இருந்தால், அவனைவிட வேறே நம்பிக்கைத்துரோகி இல்லை; நாங்கள் நம்பிக்கைத்துரோகி அன்றென்றால் பின்னையாராயிருக்கலாம் என்று ஆராய்வோம்:— நாங்கள் ஏழைகள்,எங்களுக்கு அரசுநாட்டாண்மை கிடையாது; தம்மிடத்தில்வைத்த நம்பிக்கைக்கு விரோதமாய் நடக்கிறவர்கள் யாரோ அவர்கள்தான் இராஜத்துரோகிகள், நம்பிக்கைத்துரோகிகள். 1901 - வருஷத்துக் தொடக்கத்தில் கிச்சனர் பிரபுவானவர் போவர்களுக்கு உரிமைகள் மறுத்துவிட்டுச் சமாதானம் பேசினபிறகு "சேனை! சேனை!!" என்றுஅலறிக்கேட்டார்;ஏனென்றால்:— போவர்கள் மூட்டைப் பூச்சிகள்போல் நசுங்கினார்கள் என்று நினைத்துக்கொண்டு தாமே போவர்களிடத்தில் சமாதானத்துக்குப் போனார்; அவர்கள் தாம்நசுங்கினதாகச் சமாதானப்பேச்சுகள்நடத்தவில்லையாகையால், அந்தப் போவர்களை ஆள்மேல்

ஆள்கொண்டுவந்து அவர்கள் மறுபேச்சொன்றும் பேசாமல் "சரணாகதம் அப்பா" என்றுகாலில் விழுந்து ஆங்கிலேயரை அடைக்கலமடையும்படிச் செய்து யுத்தத்தை முடித்து ஆங்கிலேயர்க்கு வெற்றி கொண்டுவரப் பார்த்தார். அவர்க்கு அனுப்புவதெல்லாம் குதிரைச் சேனைகளாயிருக்கவேண்டுமென்றுகேட்டார். இங்கிலாண்டின் குடிகள் கிச்சனர் பிரபு கேட்டதெல்லாம் கொடுத்து விடவேண்டும், யாதொரு குறையும் செய்யக்கூடாது, எப்படியாகிலும் 'இந்த யுத்தத்தைத் துலைத்தாற்போதுமென்று நினைத்தார்கள். அவ்வாறே குதிரையும் ஆட்களும் அனுப்பப்பட்டார்கள்; குதிரைக்குத்தகைக்காரர்கள் உதவாக்கரைக் குதிரைகளை வாங்கி அனுப்பினார்கள்; குதிரைக்காகத் தாம் வாங்கிக்கொண்ட பணம் பாதி மோசம்போனார்கள். ஆட்களோ கவைக்குதவாதவர்கள்; கிச்சனர் பிரபு இந்த ஆட்களில் அநேகம் பேரைத் திருப்பி இங்கிலாண்டுக்கு அனுப்பித்துவிட்டார். இந்தச்சேனைகளுக்கு அனுப்பித்ததீனியோ அநேகமாய்உள்ளேஊசிக்கிடந்தது;கிச்சனர் கேட்டது,குதிரைஏறிச்சவாரிபண்ணும்படியாய்த் தேகவலி படைத்த பயிற்சி அடைந்த ஆட்கள்; படையாளியாகும்படிவிரும்பினவர்கள்:—குடியர்களும்,வெறியர்களும்,தலைப்பா மாற்றிகளும்,முடிச்சுமாறிகளும், சிறைச்சாலையேகுடியாகக்கொண்டவர்களும்,திருடர்களும்,போக்கிரிகளும்,இப்படிப்பட்டவர்களெல்லாம் நானும் படையாளியாய் வருகிறேன், நானும் படையாளியாய் வருகிறேன்

என்று தோள்கொட்டித் தொடை தட்டி, படை கூட்டுவாரண்டைவந்து நின்றார்கள்; அநேகவியாதி பிடித்தவர்கள் கிச்சனர் பிரபுவுக்கு அனுப்பப் பட்டவர்களில் கலந்திருந்தார்கள்; இந்தப் பிணி யாளிகள் ஒரு நாள்கூட ஒரு நிலையாய்க் குதிரை சவாரிபண்ண மாட்டாமல் போனார்கள். கிச்சனர் பிரபு போர் செய்வதற்காகத் தம்மிடத்து வைத் துக்கொண்டவர்கள் சேனையில் சேர்ந்தமையால், சத்துருவை அதிகவேகமாய் ஓடிப்போய்ப் பிடிக் கும்படிச் செல்லு மச்சேனைகளால் அப்படிப்பாதி கூட வேகமா யோடமுடியவில்லை; இந்தமாதிரிவெ கு அவசரமான வேளையில் உதவாக்கரை ஆட்கள் அனுப்பிக்கப்பட்டது தர்மமா? இப்படிப்பட்டஆட் களை அனுப்பித்துவிட்டுப் போவர் சூர்பாரால் யுத் தம் நீடித்துவருகிறது என்று எங்களைத் தூஷித் தால் என்னஉபயோகம்? இந்தமாதிரியான ஆட் களை யுத்தகளத்தில் பார்த்துவிட்டுப்போவர்களுக் குத் தைரியம்பிறக்காமலிருக்குமா?"--ஆக இப்படி யெல்லாம்நாடொடுக்கித்தழுவுங்கட்சியார் அமைச் சுக் கட்சியாருக்கு எதிர்பேசி வந்தார்கள்.

இப்படி இருகட்சியாரும் சண்டை போடு வது மிகவும் அவமானகரமென்று நம்பி இப் போது இங்கிலாண்டில் பிரதானியா யிருக்கும் ஸாலிஸ்பரிப் பிரபுவுக்கு முன்னால் பிரதானியா யிருந்த ரோஸ்பரிப் பிரபு இருகட்சிக்கும் நடுநிலை மையாய் 1901-ஆம் டிசம்பர்மீ 16-உ யன்று செஸ்டர்பீல்ட் என்னும் நகரத்தில் ஒரு பெருங்

கூட்டத்தைப்பார்த்து ஒரு பேச்சுபேசினர். அப்போது தம் நாடாகிய இங்கிலாண்டில் நாடு ஒடுக்கும் கட்சியார் செய்யக்கோரும் பல சீர்திருத்தங்களையும் பற்றிப்பேசி யுத்தத்தையும் பற்றிப் பேசினர்:—"இப்போது நான் யுத்தத்தைப்பற்றிப் பேசுகிறேன் கேளுங்கள். அந்த யுத்தத்தைப் பற்றி நாம் போகவேண்டிய தோரணையை இப்போது எடுத்து உரைக்கின்றேன். நம் நாட்டுக் குடிகள் இந்த யுத்தத்தைக் கடைசி வரையில் மிகவிசையோடு கொண்டுமுடிக்க எவ்வளவு ஆவலாய் இருக்கிறார்களோ அவ்வளவு ஆவலாய்நானுமிருக்கிறேன். துரைத்தனத்தார் கூட நீங்களும் நானும் எப்படி யுத்தத்தை முடிக்க வேண்டுமென்று ஆசைப்படுகிறோமோ அப்படியேஆசைப் படுகிறார்கள்; அதில் ஒன்றும் தடையில்லை. ஆனால், துரைத்தனத்தாரும் நாமும் அமரிக்கை எப்படி உண்டாக்க வேண்டுமென்பதில்தான் வேறுபடுகிறோம்.

"நமக்குத்தென்னாபிரிகாவில்அமரிக்கையுண்டாக வேண்டுமென்று எவ்வளவு கவலை யிருக்கிறதோ அவ்வளவுகவலை துரைத்தனத்தார்க்கு இருக்கிறதாக எனக்குத் தோன்றவில்லை. எனக்குஎப்படித்தெரியுமென்றால்,தென்னாபிரிகாவில் டர்ப்பான் நகரத்தில் மில்னர்பிரபு 'யுத்தம் ஒருவிதத்தில் முடியவே முடியாது; இப்படித்தான் ஒருகால அளவில்லாமல் வெட்டுங் குத்துமாய் இருக்கும்' என்றார்; அதினால் இப்படித்தான் துரைத்தனத்தார் யுத்த

தோரணையு மிருக்குமென்று நினைக்கிறேன். மில்னர் பிரபு இப்படிச் சொல்வதால் துரைத்தனத்தார்போவர்களைவேட்டையாடிப் பிடித்துக்கொன்று விடுவதாயும், கீழ்ப்பணிந்து போம்படிச் செய்வதாயும், இப்படிச் செய்துகொண்டே வந்து எப்போது போவர்கள் மிகச் சிறு தொகையாய் விடுகிறார்களோ அப்போது அவர்களைக் கொள்ளையாடிகள் என்றும் போவர்ச்சாதியாரே இனி இல்லையென்றும் சொல்வதாயும் துரைத்தனத்தார் எண்ணிக்கொண்டிருக்கிறதாக நான் அர்த்தம் பண்ணினேன். இந்தத் தோரணையையே நெடுக நடத்தி வந்தால், யுத்தம் பேருக்குக் கூட முடியாது போலும்; யுத்தமுடிவில் அமரிக்கை யுடன்படிக்கை யொன்று ஏற்படாது போலும்; யுத்தத்தை முடிக்க ஒரு தீர்மானமுமில்லைபோலுமாகிறது. இப்படிச்செய்தால், தென்னுபிரிகாவில்போர்நிலைமைக்குஅந்தியமில்லை; அது போர்நிலைமைதானுகுமோ? அதை ஒருவிதமான போரேன்றே சொல்லவேண்டும்; அப்போதுசுமார் தென்னுபிரிகாவில் 60,000-70,000 பேரைக் காவற்படைகளாக வைக்கவேண்டிவரும்; நம் புத்திக்கு எட்டினமட்டில், தென்னுபிரிகா ஒரு வழியில் படிந்து அமரிக்கைகொண்டு வளம் படைக்காது; போவர்கள் தம் காப்புக்காக அண்ணுந்து பார்க்கும் போவர் நாட்டாண்மைக்காரர்கள், போவர்சேனுதிபதிகள், போவர்த் துரைத்தனங்கள், ஆகியஇவர்களைநாம்ஒதுக்கித்தள்ளி, அவர்களுடன்

யை நடத்திக்கொண்டுபோனால்,போவர்கள் மேற் சொல்லப்பட்டவர்களைத்தம்மனதில் எப்போதும் தியானம் பண்ணிக்கொண்டே நம் அதிகாரம், நாட்டாண்மை, துரைத்தனம், சட்டதிட்டம், யா தொன்றையும் லட்சியம் பண்ணமாட்டார்கள். இப்படி எத்தனைநாள் தலைமுறை தலைமுறையாய் நடக்கலாம்? அவர்களை நாட்டுவீரர்கள் என்றும், நாட்டுக்குயிர்துறந்த பிராணத்தியாகிகள் (Martyrs) என்றும், நாட்டுக்கு இகபரசாதகம்செய்த ஆழ்வார்கள் (Saints) என்றும் நினைத்துத் தென் னுபிரிகாப் போவர்கள் யாவரும் கொண்டாடுவார் கள். இப்படியெல்லாம் போவர்களை நினைக்கவிடுவ தே நாடு ஒருவழியாவதற்கு ஒருபெருந்தடையாய் நிற்கும்; இதன்றி, எப்படியும் 40,000 போவர்ச் சிறையாளிகளைத்தென்னுபிரிகாவுக்குக் கொண்டு வந்துதான் ஆகவேண்டும்; போவர்கள் இன்னும் சண்டைமுனையில் இருந்துகொண்டே யிருக்கும் போது, அவர்களுடன் எவ்வளவு கொஞ்சமான போவர்ப் படையாளிகள் நின்று சண்டைபோட் டுக்கொண்டிருந்தபோதிலும், அந்தச் சமயத்தில் இந்த 40,000 போவர்ச் சிறையாளிகளும் அவ்வ ளவு நெருப்புப் பொறிகளாய் நிற்க, வெடிமருந் துக்கு நெருப்புவைத்தாற்போலாகும்; அதினல் வரும் பலன் இப்படிப்பட்டதென்று என்னல் இப்போது நினைக்கவும் முடியவில்லை. இராஜதந் திரிகளுக்குச் சாமார்த்தியம் எப்படி வருகிற தென்றால், மனுஷனுக்குள்ள இயற்கையான புத்

வருகிறது. அது நிஜமானல், இந்தப் போவர்க் குடியின் முன்னோர்கள் ஸ்பெயின் தேசத்து இராஜனை இராக்ஷசனைப்போன்றவனுடைய அதிகாரத்தை எதிர்த்து நடத்திய யுத்தத்தை நம் துரைத்தனத்தார் கொஞ்சம் வாசித்துப் பார்க்கட்டும். அன்றி, இதற்கு முன்னல் நாடு மடக்கிக்கட்டும் கட்சியார் (Lord North) ஒரு தடவை பன்னிரண்டு வருஷம் அமைச்சுபுரிந்தார்கள். இந்த அமைச்சர்களும் அந்தக்கட்சியைச் சேர்ந்தவர்கள்தான்; அந்தஅமைச்சர்கள் ஆண்டதில் இன்னும் பாதிநாள் இந்த அமைச்சர்களாளவில்லை. அந்த அமைச்சர்களை யாவர்க்கும்தெரியும். அந்த அமைச்சர்கள் அப்போது நடத்திய ஆட்சியையும் கொஞ்சம் வாசிக்கட்டும். அப்போதும் இப்படித்தான் குடிகள் மூர்க்கமாய்க் குருட்டுத்தனமாய் அமைச்சர்களைத் தாங்கி வந்தார்கள்.

"இப்போது என் தோரணை என்னவென்றாலோ, சொல்லுகிறேன்கேளுங்கள்:—நான்போவர்களை மடிக்காமல் அவர்களுடன் அமரிக்கை ஏற்பாடு பண்ணிக்கொள்வேன். தென்னபிரிகா படிந்து வழிப்படும் ஏற்பாடும் செய்துகொள்வேன். ஆகையால்,பொறுப்புள்ளபோவர்நாட்டாண்மைக்காரர்கள் யாராயிருந்தாலும், அமரிக்கைப்பேச்சு ஏதாவது சொல்லவந்தால் நாம் காது கொடுத்துக்கேட்கவேண்டும்; ௩௩ கரண்டை இப்போது ஹாலண்டு நாட்டில் சுற்றிக்கொண்டிருக்கும் நாட்டாண்மைக்காரர்களே அமரிக்கைப்பேச்சுகள்விட்

டால், எனக்கு இன்னும் சந்தோஷந்தான்; நீங்கள் அந்தநாட்டாண்மைக்காரர்கள் தேசபிரஷ்டர்கள், சிதறிக்கிடப்பவர்கள், நம்பிக்கை யிழந்தவர்கள், ஆக இப்படியெல்லாம் சொல்லலாம்; ஆனால் அவர்களைத் தங்கள் குடிகளாகிய போவர்களே பிரஷ்டர்கள் என்று நினைக்கிறார்களோ என்னமோ எனக்குத்தெரியாது; இது மாத்திரம் நான் சொல்வேன்: நம்மோடு சண்டைக்கு வந்தவர்கள் அவர்கள்தான்; அவர்களைத் தவிர வேறே நாட்டாண்மைக்காரர்கள் போவர்களுக்குள் நமக்குக் கிடைக்காம லிருந்தால், அவர்களிடத்திலேயே உடன்படிக்கை செய்துகொள்ளத்தான் வேண்டும்; வேறே வழியில்லை, அதுதான் உத்தமம்; அவர்களுக்குத்தான் அதிகாரமென்று ஒன்றிருக்கிறது. தென்னாபிரிகாவில் இறைந்துகிடக்கும் போவர்களண்டைச் சமாதானப்பேச்சுகள் விடுவது கஷ்டம்; அவர்களுக்கு அதிகாரமிருக்கிறதாகத் தெரியவில்லை; அவர்கள் எங்கே யிருக்கிறார்களோ தெரியாது; ஸ்டெயின் குடியரசருடன் அமரிக்கைப்பேச்சு பேசுவது முடியாது; அவர் தென்னாபிரிகாவில் எங்கேயோ ஒரு மூலையில் இருப்பார். நம் துரைத்தனத்தாரே அவர்களுக்குச் சமாதானப்பேச்சுகள் அனுப்பவேண்டுமென்று நான் சொல்ல வரவில்லை; ஆனால், சமாதானப் பேச்சுகள் வந்தால் காதுகொடுத்துக் கேட்க வேண்டுமென்றுதான் சொல்லுகிறேன்; நான் பிரதானியா யிருந்தால் இப்படித்தான் செய்வேன்.

"இந்தமாதிரி ஒருவேளை அமரிக்கைப் பேச்சுகள் நடக்கவேண்டுமானால் இரண்டு தடைகள் இருக்கிறதாக நீங்கள் ஒரு வேளை சொல்லலாம்; அத்தடைகள் நீக்கமுடியாதபடி அவ்வளவு பிரம்மாண்டமானவையென்று குடிகள் நினைக்கிறார்கள்; நானப்படி நினைக்கவில்லை. முதல்தடை என்னவென்றால், 'போவர்கள் தானாட்சி கேட்கிறார்களே? என்னமாயதை அவர்களுக்குக் கொடுக்கலாம்?' என்று சொல்லலாம். போவர்களில் இனித் தமக்குத் தானாட்சிவருமென்று நினைக்கு மூடர்கள் இன்னமு மிருக்கிறார்களென்று நான் நினைக்கவில்லை: போவர்கள் வெகு தந்திரமான சனங்கள்; நம் துரைத்தனத்தாரைக் காட்டிலும் மதிகத்தந்திரம் காட்டியிருக்கிறார்கள்; அவர்களே யுத்தத்தை மத்தியஸ்தமாகக் கூப்பிட்டார்கள்; அப்படிக் கூப்பிட்டபோது யுத்தம் விதித்த கட்டளைப்படிப் போகாமலிருப்பார்களா? போவர்கள் அப்படிப் போயேதீர்வார்கள்; அதில் சந்தேகமில்லை. போதாவும் கிச்சனரும் தானாட்சியை விட்டுவிட்டு மற்றபடிச் சமாதானப் பேச்சுகளைப் பேசினார்கள். அப்பேச்சுகளும் ஆங்கிலேயர்க்குஒத்துவராமல்போயின; அப்போது,போதா 'எங்கள்குடிகளுக்குத் தானாட்சியைப் போக்கடித்துங்களுடன் சமாதானம் பேசமாட்டேன்' என்று வெளிப்படச் சொன்னாலொழியத் தம் குடிகள் தம்மண்டை நின்று சண்டைசெய்யமாட்டார்கள். நீங்களும் நானும்கூட போதாவைப்போலத் தான்செய்திருப்போம்;தானாட்சிவேண்டாமென்று

அதைக் கைவிட்டாகிலும் சமாதானம் செய்யலா மென்றுபோவர்க்குஇஷ்டமிருந்தபோதிலும்,அப் படிப்பட்ட சமாதானப் பேச்சுக்கும் ஆங்கிலேயர் அப்போது இணங்கவில்லை; அப்படியிருக்கத் தா னுட்சியில்லாதமற்ற உபயோகமற்ற சாரமில்லாத பேச்சுகளுக்காகப் போவர்களைச் சண்டைக்கு நின்று உயிரிழக்கச்சொன்னல் அவர்கள் உயிரிழப் பார்களா? ஆகையால்,போதாவும் தம்படையாளிக ளண்டைக்குப்போய்த்தானுட்சிகொடுத்தாலொழி யபோர்நிற்காது என்றுசொல்லிவிட்டு மீளவுந்துப் பாக்கியைக் கையிலெடுத்தார். தானுட்சியல்லாத மற்றக் கௌரதையான பேச்சுகளைப் போவர் களுக்கு நாம் உறுதிசொல்லிச் சமாதான மொன் றைத் திட்டப்படுத்தி அதில் நாம் கையெழுத்துப் போடுகிறவரையில், போவர் மந்திரிகளும், போ வர்த் தலைவர்களும் தானுட்சிக் கொடியைத் தூக் கித்தான் காட்டுவார்கள்; 'இது வேண்டும் இது வேண்டும்' என்றுதான் சொல்லுவார்கள், அதில் தடையொன்றுமில்லை.

"இன்னொருதடையிருக்கின்றதென்றூர்கள்: அது நம் துரைத்தனத்தாரின் தன்மை; மில்னர் பிரபு, சேம்பர்லேன் துரை, இவர்களுடன் போ வர்கள் அமரிக்கைப் பேச்சுகள் நடத்துவதற்கு யாதொரு தடையுமிருக்காது என்று நினைக் கிறேன். போவர்களுக்கு இவ்விருவர்களையும் கண்டால் பிடிக்கவில்லை என்பது நிச்சயந்தான்; ஆனல், இவ்விருவர்களையும் என்னமாய் வேலை யைவிட்டு நீக்கலாம்? மில்னர் பிரபு, சேம்பர்லேன்

துரை, இவர்களை நீக்கவேண்டுமென்று, இந்த அமைச்சர்களையே நீக்கவேண்டும்; ஏனென்றால், இத்துரைத்தனத்தில் இப்போது அமைச்சு புரிபவர்கள் நாட்டாண்மைக்குவந்தபோது அவர்கள் பக்கத்தில் நாடோடுக்கு கட்சிக்குமேல் 200 பொறுக்குச்சீட்டுக்கள் அதிகமிருந்தன. அந்த 200 சீட்டுக்களையும் நாடோடுக்குவார் பக்கம் திருப்பினால், இப்போதுள்ள அமைச்சர்களை நீக்கிவிடலாம். அது சாத்தியமா? அன்று; மில்னர் பிரபுவைத் தென்னாபிரிகாவிலிருந்து நீக்கவேண்டுமென்றால், அது இன்னும் அசாத்தியம்; ஏனென்றால், தென்னாபிரிகாவில் டச்சுக் குடிகளுக்குள் இரண்டுகட்சிகளுண்டு: ஒன்று, அரசநேசிகள்; மற்றொன்று; கலகநேசிகள்; இப்போது கலகநேசிகள் அநேகர் போவர்களுடன்சேர்ந்து நமக்கு விரோதமாய்ச்சண்டைசெய்கிறார்கள்; அரசநேசிகள் மில்னர் பிரபுமேல் வெகு நேசம்வைத்திருக்கிறார்கள். அப்படியிருக்க, அவரை இப்போது நீக்கிவிட்டால், அரசநேசிகளால் வெகு துன்பங்கள் நேரிடும். ஆகையால் அவரையும் நீக்கக்கூடாது.

"கலகப்போவர்களுக்கு மன்னிப்புவேண்டுமென்று போவர்கள்கேட்கிறார்களேஎன்றால்; அதுதான் கஷ்டம்; கிச்சனர் பிரபுவுக்கும், போதாச் சேனாதிபதிக்கும் நடந்த அமரிக்கைப் பேச்சுகளில் இது ஒன்றல்லவா? இதற்கு நம் துரைத்தனத்தார் இசையாததினால்தான் போனவருஷம் அந்த அமரிக்கைப்பேச்சு துஸ் என்று போயிற்று. கிச்சனர் பிரபுவுக்கு மன்னிப்பு கொடுக்க இஷ்டம்;

மில்லர் பிரபுவுக்கு அது கொடுக்க இஷ்டமில்லை. இப்போது இந்தச் சேதியைப்பற்றி நீங்கள் ஆராயவேண்டுமென்றால் தென்னாபிரிகாவில் அமரிக்கையுண்டாவதற்குப்பல சேதிகள் நடக்கவேண்டும். (1) அங்கே கடைசியாய் நடக்கும் ஏற்பாடுகள் நிலையாய் நிற்கவேண்டும், பேருக்குச் செய்யக்கூடாது; (2) அரசநேசிகள் இப்போது கஷ்டப்பட்டுக்கொண்டு இருக்கிறார்கள்; அவர்களின் இன்பத்துக்குவேண்டியதைச் செய்யவேண்டும்; (3) போவர்கள் இனி நம் முடன்குடிகளாய் வாழ்ந்து வரவேண்டியவர்க ளாதலால், அவர்களை அவமானம் பண்ணி இகழ்ந்து திட்டி நசுக்குவது கூடாது; அன்றி, அவர்கள் நம் *ஒற்றைத்தலைநாட்டில் (ஏகாதிபத்தியம்) அரசநேசிகளாயும் சிறந்த பொருள்களாயும் வாழவேண்டியிருக்கிறார்கள்; (4) கடைசியாய், இப்போது சத்துருக்களாய் மாறிமாறி ஒருவரை யொருவர் அடித்துக்கொண்டிருக்கும் போவர்கள், பிரிடிஷார், இவ்விருவரும் இனித் தென்னாபிரிகாவில் ஒருவர் பக்கத்தில் ஒருவர் இன்பத்துடன் ஒற்றுமையாய்க் காலதேச வர்த்தமானத்துக்குத் தக்கபடி உயிர்வாழவேண்டி யிருக்கிறார்கள். இன்னமும் போவர்கள் நம் சாதியார்க்கு நடுவில் மாற்றாராய்க் குடிகொண்டு தீங்குற்றவர்கள் போல முணுமுணென்று முணங்கிக்கொண்டு இராமல் காலாகாலத்தில்போவர்களும்,பிரிடிஷார்களும்,ஒத்து ஒன்றுபட்டு வாழும்படி நான் கோருகிறேன், நான் தேடுகிறேன், நான் நாடுகிறேன்; அவர்கள்

அப்படி வாழட்டும், வாழாமல் போகட்டும்,அவர்கள் அப்படி வாழவேண்டியபடிச் செய்வது நம் கடமை. ஆகையால், நாம் கூடியமட்டில் கலக நேசிகளை மன்னித்து அவர்களுக்கு அடைக்கலம் கொடுப்பது தர்மம். இந்தக் கி. பி. 20 நூற்றாண்டில், ஆங்கிலேயத் துரைத்தனத்தார் இந்த மாதிரித் தென்னாபிரிகாவைச் சீர்ப்படுத்தாமல் பசித்தவன் பழங்கணக்குப் பார்ப்பதுபோல், அழுங்கிப் போகும் துன்பச்செயல்கள் அப்போதப்போது வெளிக்கிளம்பும்படியான தோரணையை அங்கே நாட்டுவார்களா? நாட்டக்கைகூடுமா? நாட்டுவார்களென்று நீங்கள் நினைக்கிறீர்களா? நானது கைகூடுமென்று நம்பவில்லை. நாமந்த விதமான தோரணைமேல் ஆசைவைக்கக்கூடுமா?

"இதன்றி, போவர்களில் அரசருக்கு ஆணையிட்டுக்கொடுத்து நேசங்காட்டுவார்களுக்கு ஆங்கிலேயக் குடிகளுக்குண்டான உரிமைகள் யாவும் கொடுத்துவிடவேண்டும்; இப்படி எவ்வளவு சீக்கிரமாய்ச் செய்கிறீர்களோ அவ்வளவு உங்களுக்கு நல்லது; அது மாத்திரமன்று, அவ்வளவு சீக்கிரத்தில்தென்னாபிரிகாவும் வளம்படைக்கும். போவர்கள் பொறுக்காட்சி வேண்டுமென்றால், அது இப்போதே முடியாது; அது கொடுப்பதற்கு அவர்கள் நாடு ஒருவழியில் படியவேண்டும்; பயிர்செலவுக் குடிசைகள் மறுபடியும் கட்டப்படவேண்டும்; நாடு இப்போது காடாகி வெட்டவெளியாய்க் கிடக்கிறது; நாட்டில் குடிவளமுண்டாகவேண்டும். அதற்குள் மில்னர்பிரபுவையுவத்

துக்கொண்டு நாலைந்து பேர்களை ஒரு கூட்டத்தா ராக ஏற்படுத்தி நாட்டைச்சீர்ப்படுத்தவேண்டும். இக்கூட்டத்தில், நம்மவர்களே அதிகமிருக்க வேண்டும், போவர்கள் சிலரையும் சேர்க்கவேண்டும்; இந்தமாதிரிச்செய்து, தென்னுபிரிகாவில் போவர்களுக்கு ஒரு பொறுக்காட்சி யுண்டாகும் காலத்தை நோக்கி நாம் விரைவாய் ஓடிக்கொண்டே போகவேண்டும்.

"மேற்சொன்ன நல்ல நிலைகள்-தென்னுபிரிகாவில் பணமில்லாமல் எவ்வாறு வருமென்றால், நாமிப்போது மாசத்துக்கு யுத்தத்துக்காக 60 லட்சம் பவுன் செலவழிக்கிறோம். ஒரே அடியாய் யுத்தத்தால் ஏழ்மைப்பட்டபோவர்களுக்குவெகு தயாளத்துவததுடன் பணத்தைவாரி யிறைத்துத் தென்னுபிரிகாவில் ஒரு நிலையான அமரிக்கையை நான் பிரதானியாயிருந்தால் நாட்டுவேன்; இந்தத் தயாளத் தன்மையால், நாட்டில் கொஞ்சநெஞ்ச மிருக்கும் சாதிப்பகையும் தொலைந்து போகும்; நாடும்க்ஷேமப்படும்; குடிவளர், நீர்வளம், படைத்துப் பெருகும்.

"**கிச்சனர் விளம்பரம்** என்று சொல்லப்படும் விளம்பரமானது போவருக்கு வெறிபோட்டிப் போரை நீடித்து நம்ம நாட்டுக்கு வெகு தீங்கு செய்தது; அதை நம் இங்கிலாண்டண்டைதான் யாரோ கிளப்பிவிட் டிருக்கிறார்கள்; ஆனாலும், அதற்கு **கிச்சனர்** விளம்பரமென்று பேர் வந்திருக்கிறது விநோதந்தான். அதினால் வெகு துன்ப

முண்டாயிருக்கிறது; அது இருந்தால்போவர்கள் சமாதானப்படுவதற்கு இஷ்டப்படமாட்டார்கள் என்றால், அதை அடித்துவிட்டு நீக்கிவிடலாம்; அதுவும் ஒரு கஷ்டமா?

"போர்தாவுக்தும் கிச்சனருக்தும் வழக்கிலிருந்த மற்றச் சேதிகள் யாவும் வெகு சுலபமாய்த் தீர்ந்துபோம். அஞ்சாறுபேர் வேலைத்திறமுள்ள கைகாரர்களை ஏற்படுத்தி போலீர் பிரிடிஷார் இரு வரையும் அதில் சேர்த்துவிட்டால், ஒரு வாரத் துக்குள் எல்லாம் சரிப்பட்டுப்போம்; ஆகையால், போவர்த் துரைத்தனத்தார் நம் மகாப்பிரபுவின் துரைத்தனத்துக்கு விரோதம் நினைக்காமல், கலகம் பண்ணாமல், சமாதானப் பேச்சுகள் நம்மிடத்தில் விட்டால், அமரிக்கை நிலைபெறுவதற்குக் காலம் வெகுதூரமில்லை; வெகுதூரமிருக்கவுமிடமில்லை; வெகுதூரமிருக்கவு முடியாது.



6-வது கூற்று.

# தென்னாபிரிகாவில் அமரிக்கை நிலைபெற்றது.



இப்படிப் பேசின பேச்சைப்பற்றிப் போவர்கள் ஹாலண்டு நாட்டில் என்னநினைத்துக்கொண்டிருக்கிறார்கள் என்று ஆழம்பார்க்க ஒருவன் ஹாலண்டு நாட்டுக்குப்போய் அங்கே போவர்ச் சமாதானக் கூட்டத்தில் சேர்ந்த உல்மான்ஸ் துரை என்பவரைக் கண்டு கேட்டதில் அவர் சொன்னதாவது:— நாங்கள் சமாதானப் பேச்சைவெகு நேசமாய்த் தீர்த்துக்கொள்ள இஷ்டப்படுகிறோம். நம்மிருவர் சேனைகளும் சண்டைமுனையில் இருந்தால் அமரிக்கைப் பேச்சுகள் நடக்கக்கூடாதா? போவர்கள் கலகநேசிகளுக்கு மன்னிப்பும்போவர்க்குடிகளுக்கு * ஆட்சுவாதீனமும் கிடைத்தாலன்றித்தென்னாபிரிகாவில் போவர்கள் அமரிக்கைப்பேச்சையே எடுக்கமாட்டார்கள்என்று ஒருவிளம்பரம்போனவருஷம்ஜூலையீ போட்டிருக்க நாங்கள் இங்கே ஹாலண்டிலிருந்து இங்கிலாண்டுக்கு எப்படிப்போய் அமரிக்கைப் பேச்சுகள் உங்கள் துரைத்தனத்தார்க்கு விடுவோம்? ஆனாலும், ரோஸ்பரிப் பிரபு சொன்னதற்கு ஏற்கத் தீர்மானம் செய்யவேண்டுமானால், ஆங்கிலேய துரைத்தனத்தார் தங்களுக்கிஷ்டமான

அமரிக்கைப் பேச்சுகளைச் சொல்லிச் சிலபேரை ஹாலண்டு நாட்டுக்குத் தங்கள் நாட்டாண்மையுடன் அனுப்பி இந்தமாதிரிதான் அமரிக்கைப் பேச்சுகள் நடக்கவேண்டுமென்று எங்களுக்குத் தெரிவித்தால் நாங்களு மவர்களுமாய்க் கலந்து பேசுகிறோம். எங்களிஷ்டத்தை நாங்களும் சொல்லுவோம். இந்தப்படி யுத்தத்தை நிறுத்திவிடலாம். சாம்பர்லேன் துரை 'போவர்கள் மறுபேச்சில்லாமல் கீழ்ப்பணியவேண்டும்; அப்படி யல்லாது மற்றப்படி எங்களுக்கு இஷ்டமில்லை' என்று சொன்னதுகூட நாங்கள் இங்கிலாண்டுக்குப்போய்ச் சமாதானப் பேச்சுகள் விடுவதற்குஒரு பெருந் தடையாயிருக்கிறது. அப்படிப் போனால், இங்கிலாண்டில் குடிகள் நாங்கள் என்னமோ மறுபேசசில்லாமல் கீழ்ப்பணியப் போனோமென்று நினைத்துக்கொள்ளுவார்கள். இந்தமாதிரிச் செய்யவேண்டுமானால் நாங்கள் தென்னாபிரிகாவில் சண்டை முனையில் இருக்கும் போவர்களுடன் முதல் முதல் தந்தி மூலமாய்ப் பேசித்தெரிந்து கொள்ளவேண்டும். அதுவும் ஸ்டெயின் குடியரசர் போட்டு மேற்படி விளம்பரத்துக்குப் பிறகு இந்தமாதிரிச் செய்வது சுத்தப்பிசகு; ஆண், பெண், அடங்கலுக்கும் கேடு விளைக்கு மிந்தக் கொடும் போரை நிறுத்தவேண்டுமென்று நாங்களு மாசைப்படுகிறோமென்றுமாத்திரம் நீங்கள் உறுதியாய் மனதில் வைத்துக்கொள்ளுங்கள்;—என்று போவர்களின் கருத்தை வெளியிட்டார்.

இது நடந்த சில நாளுக்குமுன் ஹாலண்டு நாட்டுப் பிரதானியைத் தென்னாபிரிகா யுத்தத்

தைப்பற்றி ஒருவர் கேட்டபோது அவர் சொன்னது:— நானே இந்த நாட்டுத் துரைத்தனத்துக்குத் தலைவன்; நான் பேசுவது கொஞ்சம் உள்ளிருந்துதான் பேசுவேன்; வெளிப்படையாய் அஜாக்கிரதையாய்க்கண்டதை எல்லாம்சொல்வதுபிசகு; நான் இந்த யுத்தம் குடிகள் மடிந்து நசித்துப் போகும் யுத்தமென்று வெளிவிட்டுச் சொல்ல வேண்டுமோ? நாங்கள் என்னமோ இந்த விஷயத்தில்தலையிடுவதாகப்பேச்சுநடந்தது; அதுவெறும் பொய்; எங்கள் இராச்சியமோ சிறியது; ஆனதினால், நாங்கள் தாறுமாறாய் நடந்துகொள்ளாமல் கொஞ்சம் ஜாக்கிரதையாய் நடுநிலைகொண்டிருக்க வேண்டியது எங்கள் கடமை; இந்த உலகத்தில் பெரும் பெரும் கைகார இராஜாக்கள் யாவரும் முதல்முதல் அதில்தலையிட இஷ்டமில்லாத இந்த விஷயத்தில் நாங்களா முதல்முதல் தலையிடுகிறது? வெகுநன்றாயிருக்கிறது! ஒருவேளை இங்கிலாண்டார் நீங்கள் இதில்தலையிடத்தேவை இல்லையென்று சொன்னால் அது எங்களுக்கு அவமானமன்றோ? அன்றி, அது எங்களுக்கு அவர்களின் விரோதத்தைக் கொண்டுவந்து விடாதா?

**சேவைக்குப்போனவர்;**—தங்கள் ஹாலண்டுக்கும் இங்கிலாண்டுக்கும் உறவு எப்படி யிருக்கிறது?

**பிரதானி;**—வெகு சரியாயும் நேசமாயுமிருக்கிறது; நான் பிரதானியானதால் அந்தமாதிரிதான் நான் ஆங்கிலேயருடன் உறவுகொண்டாட வேண்

டும்; இராச்சியத்துக்குப் பொறுப்பான ஒருமந்திரி வேறே எப்படியிருப்பார்? ஐரோப்பாவில் மற்ற இராஜாங்கத்தார்களும் அவ்வாறே செய்து வருகிறார்கள்; ஆனால், குடிகள்மாத்திரம் போவர்கள்மேல் வரவர அதிகநேசத்தைக் காண்பித்து வருகிறார்கள்; குடிகள் சங்கதியிப்படி இருக்கிறது; துரைத்தன முறையில் இந்த உலகத்தில் போவர்களுக்குயாதொரு தோழருமில்லை; போவர் பக்கம் வெகு அபிமானமாய்ப் பேசும் எங்கள் இராச்சியத்தில்கூட (பிராஞ்சுதேசம்) அன்றே முக்கியமான மந்திரிமார்கள் ஆங்கிலேயர்க்குத் தோழமையே காட்டி வருகிறார்கள்!

அநேகம்பேர் எங்களை மத்தியஸ்தர்களாய் இருந்து யுத்தத்தில் தலையிட்டு அதை நிறுத்தும்படிச் சொல்லுகிறார்கள்; இங்கிலாண்டிலிருந்து அநேகம்பேர் தமக்குத்தாமாய் அமரிக்கை விரும்பினவர்களாய் இங்கே எங்களிடத்தில் வந்து போகிறார்கள்; இந்தமாதிரியான முயற்சிகளெல்லாம் எங்களிடத்தில் நடவா. ஏதாவது அமரிக்கை விஷயத்தில் நடக்கவேண்டுமானால் இங்கிலாண்டே செய்யவேண்டும்.

**சேவைக்குப் போனவன்;**—ஐரோப்பாக் குடிகள் சொந்தத்தில் சமாதான விஷயமாய் ஒன்றும் செய்துகொண்டில்லையா? குரூகரும் அவரைச் சேர்ந்த பரிவாரங்களும் புடைசூழ்ந்தவர்களும் "ஆங்கிலேயர் போவரை ஒருபோதும் செயிக்கப் போகிறதில்லை; ஒரு நாளில்லாவிட்டால் ஒருநாள்

அமெரிக்காநாடுகளை யிழந்தாப்போல் **கேப்நாடு** களையுமிழக்கப் போகிறார்கள்'' என்று நினைத்துக் கொண்டில்லையா?

**பிரதானி;**—தருகரும் அவரைப் புடைசூழ்ந்தா ருந்தாரும் அப்படிப்பட்ட எண்ணங்கொண்டவர் கள்! போகப்போகத்தான் அது சரியா அல்லது தப்பாவென்று தெரியும், இப்போது தெரியாது; போவர்க்குழந்தைகள் இனித் தென்னாபிரிகாவில் இல்லை என்பது நிஜந்தான்; அடைக்கலப் போவர் கூடாரத்தில் குழந்தைகள் யாவரும் மடிந்து போ னார்கள்; ஆனால், இன்னும் 60,000 போவர்கள் வெகுசாய் எல்லாரும் சிறுவர்களாயேசிறைப்பட் டிருக்கிறார்கள்; இப்போதோ, பிற்பாடோ, ஏதோ ஒருகாலத்தில் இவர்கள் தென்னாபிரிகாவுக்கு வந்துதான் ஆகவேண்டும்; அவர் தலைமுறையில் பிறந்தவர்கள் **கேப்காலனியில்** இருக்கும் டச்சுக் குடிகளைச் சேர்த்துக்கொண்டு தென்னாபிரிகாவை முற்றுமே இங்கிலாண்டினிடத்தி லிருந்து ஒரு வேளை விடுவிக்கலாம்; அந்தக்காலம் வெகு எட்டி யிருக்கும்; ஆங்கிலேயர்கள் கடைசியாய் **கேப்நாட்** டை இழந்துவிடுவார்கள் என்பவர்களுக்குத்தான் அந்தநினைப்பு; ஆனாலும், அதெல்லாம் மனோராச் சியம், இந்தமாதிரி விஷயங்களிலெல்லாம் புத்தி மான்கள் ஒன்றும் முன் யோசனை சொல்லமாட் டார்கள்.

**தருகரி**டத்தில் எப்போதும் வந்து போய்க் கொண்டிருக்கிறவர் ஒருவர் அதே காலத்தில் இந்

தச் சேவைக்குப்போனவர்க்குக் குருகர் சொன்னதாகச் சொன்னது என்னவென்றால்:— இந்தத் தென்னாபிரிகாவில் ஆங்கிலேயர்கள் போவர்க்குடிகளை யெல்லாம் ஒன்று திரட்டி அங்கங்கே அடைக்கலக்கூடாரமென்றஇடங்களில்அடைத்து வைத்திருக்கிறார்கள். அந்தக்கூடாரங்களைப்பகைச் செயல்கள் நடக்கும் வெளிகளை விட்டுக் கடற் கரையோரத்துக்குப் பேர்த்துக்கொண்டுபோகக் கூடாது; ஏனென்றால், இந்தப் போவர்குடியரசுகளில் போட்டிருக்கும் இந்தக் கூடாரங்கள் அக் குடியரசு நாடுகளில் இல்லாது போனால், அங்கே ஆங்கிலேயர்க்குள்ள நிலைமை துன்பநீங்கி வெகு இன்பமுள்ளதாகும்; இப்போது, அவர்களுடைய சேனைகள் அங்கு மிங்குமாய்ப் பேர்ந்துகொண்டிருக்கும் இடங்களுக்கு நடுவில் இந்தக்கூடாரங்கள் இருப்பதால் போவர்கள் வெகு லாபமடைந்து வருகிறார்கள்;—என்று சொன்னார்.

அப்போது, இந்தச் சேவைக்குப்போனவர், "இது நெஞ்சில்கொஞ்சமேனும் ஈர இரக்கம் இல்லாத தன்னுடேசம் (சுதேசாபிமானம்); இப்படியும் ஒருவர் தன்னுடேசத்தைக் காண்பிப்பதுண்டா? சத்துருவுடன் வெகு சுலபமாய்ச் சண்டை செய்வதற்காக ஆயிரக்கணக்காய்ப் பெண்டிர்கள் பிள்ளைகளை இந்த யுத்தத்துக்கு இரை கொடுப்பதுண்டா?" என்று ஆச்சரியப்பட்டாராம்.

இந்த மாதிரி ரோஸ்பரிப்பிரபு மத்தியஸ்தமாய்ப்பேசினபிறகு ஹாலண்டு துரைத்தனத்தார்

இங்கிலாண்டின்பிரதானிக்கு ஒருதூதரை அனுப்பித்தார்கள். "ஐரோப்பாவிலிருக்கும் போவர்ப் * பொறுப்பாளிகள் சில சந்தர்ப்பங்களால் இங்கிலாண்டு துரைத்தனத்தாருக்கு நேரப் போக்குவரத்துக் கடிதங்கள் எழுதக்கூடவில்லை; ஆகையால், ஹாலண்டு துரைத்தனத்தார் இந்த விஷயத்தில் நல்ல எண்ணத்துடன் உழைத்து முயன்று வருகிறார்கள்; ஆகவே, ஐரோப்பாவில் இருக்கும் போவர்ப் பொறுப்பாளிகள் தென்னாபிரிகாவுக்குப் போய்ப் போவர்த் தலைவர்களுடன் சில நாள் அளவாய் அங்கேயே யிருந்து பிறகு அவர்களிடத்தில்முழுநாட்டாண்மையும்பெற்றுக் கொண்டு திரும்பி ஐரோப்பாவுக்கு வந்து ஆங்கிலேயருடன் சமாதான உடன்படிக்கைசெய்ய இஷ்டப்படுவார்களா என்று போவர்த் தலைவர்களைக் கேட்கவேண்டும். அப்படிக் கேட்கிறோமென்று ஆங்கிலேய துரைத்தனத்தார் சம்மதப்பட்டால் அப் பொறுப்பாளிகள் தென்னாபிரிகாவுக்குப் போய்த் திரும்பி ஐரோப்பாவுக்கு வருகிறவரையில் அவர்களைச் சரியாய்ச் சாவதானமா யிட்டுக் கொண்டுபோகவும் வரவும் ஆங்கிலேய துரைத்தனத்தார் ஏற்பாடுகளைச் செய்யவேண்டியிருக்கும்; அன்றி, தந்திப் போக்குவரத்தும் சுலபம் பண்ணிவைக்க வேண்டியிருக்கும்;ஹாலண்டுக்குப் போவர்ப் பொறுப்பாளிகள் திரும்பி வந்தவுடன் ஹாலண்டு துரைத்தனத்தார் அவர்கள் தெரிந்து கொண்டு வந்தசேதிகள் இன்னவென்று ஆங்கிலேய துரைத்தனத்தார் பக்கம் இந்த விஷயமாய்

ஆபிரிகாவில் அமரிக்கை நிலைபெற்றது. ஈன்

ஏற்பட்டிருக்கும் முழுநாட்டாண்மைக்காரர்களுக்குத் தெரிவிப்பார்கள்'' என்ற ஒரு கடிதத்தை அத்தூதர் இங்கிலாண்டுக்குப்போய் 1902-ம் ஹு ஜனவரிமீ 25உயன்று பிரதானிகையில் கொடுத்தார்.

இதற்கு ஆங்கிலேய துரைத்தனத்தார் விடுத்த மறுமொழி யென்னவென்றால்:—"மேற்சொன்னதை உற்றுப் பார்ப்போமானல்; இந்த யோசனை ஹாலண்டு நாட்டுத் துரைத்தனத்தாரே செய்ததாகத் தெரிகிறது. இது போவர்த் துரைத்தனத்தார்க்காவது போவர்த் தலைவர்களுக்காவது தெரியாததுபோலத் தோன்றுகிறது; அவர்களின் நாட்டாண்மை இதில் ஒன்றுமில்லை போலவும் தோன்றுகிறது. ஆங்கிலேய துரைத்தனத்தார் இதைப்பற்றி வெகுதூரம் நன்றாய் ஆலோசித்தார்கள்; இந்த விஷயத்தில் ஹாலண்டு நாட்டுத் துரைத்தனத்தார்க்கு ஜீவாகாருணியமிருக்கிறதைப்பற்றி வெகு சந்தோஷமடைந்தார்கள். ஆனாலும், போவர்கள் இந்த யுத்தம் தொடங்கின சில காலத்துக்கெல்லாம் இந்தத் துரைத்தனத்தார் ஒரே தீர்மானமாய் வெளிப்படையாய் உடைத்துச் சொன்னதைக் கைவிடமாட்டார்: அது, இந்தத் தென்னாபிரிகா யுத்தத்தில், எந்த அந்நிய துரைத்தனமேயாகட்டும்,ஒன்றும் தலையிடக்கூடாது, என்பதுதான்.

"போவர்ப் பொறுப்பாளிகளே இந்தத் துரைத்தனத்தார்க்குத் தங்களைச் சாவதானமாய்ப்

போவர்த் தலைவர்களிடத்தில் இட்டுக்கொண்டு போய் மீள அழைத்து வரவேண்டுமென்று ஒரு மனு எழுதிக்கொண்டால், அதில் என்ன தப்பு? அந்தமாதிரி ஒருமனு அவர்கள் கைக்கு வருகிற வரையிலும், அதிலுள்ளது இன்னசெய்தி என்று அவர்களுக்குத் தெரிகிறவரையிலும் ஆங்கிலேய துரைத்தனத்தார் அந்த மனுவைப்பற்றி யாதொரு அபிப்பிராயமும் சொல்லுவதற்கில்லை. ஆனாலும் ஒன்று மாத்திரம் தெரிகிறது: அப்பொறுப்பாளிகளுக்குப் போவர்த் தலைவர்கள் தென்னாபிரிகாவில் நடத்தும் நடவடிக்கைகளில் யாதொரு செல்வாக்கு மில்லை என்று தோன்றுகிறது. போவர் சார்பாய் நடக்கவேண்டிய எல்லா நாட்டாண்மையும் (சமாதானமுள்பட), ஆரஞ்சு நாட்டுக்த ஸ்டேயின் துரையும், டிரான்ஸ்வாலுக்கு ஷாக்பர்க்கர் துரையும் நடத்துவதாக இந்தத் துரைத்தனத்தார்க்கு எண்ண மிருக்கிறது. இது நிஜமாகும் பட்சத்தில் தென்னாபிரிகாவில் போவர்ச் சேனைத்தலைவர்களும் ஆங்கிலேயச் சேனாபதித் தலைவரும் சமாதான விஷயமாய் நடத்த வேண்டியதை அங்கேயே நடத்திக் கொள்ளலாம்; இப்படித்தான் மிகச்சீக்கிரமாயும் திருப்திகரமாயும் நடக்கவேண்டிய தீர்மானம் முடியும். ஆங்கிலேயச் சேனைத்தலைவருக்கு அப்போதே, போவர்கள் வேண்டிய சமாதான ஏற்பாடுகளை இங்கிலாண்டுக்கு அனுப்பும்படி உத்திரவு போயிருக்கிறது. இந்தச்சந்தர்ப்பங்களைக்கொண்டு, நடக்கவேண்டிய சமாதானப் பேச்சுகள் யாவும் தென்

ஞபிரிகாவிலேயே நடக்கவேண்டியதென்றும், ஐரோப்பாவில் நடக்கக்கூடாதென்றும் இங்கே தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

"மேலும், போவர்ப் பொறுப்பாளிகள் மேற் சொன்னபடித் தென்னுபிரிகாவுக்குப் போய்த் திரும்பி ஐரோப்பாவந்துசேர்வதற்குள் குறைந்த பட்சம் மூன்றுமாசம்பிடிக்கும்; அதற்குள் அனு வசியமாய்ப் போர்நீடித்து வெகு துன்பத்துக்கு இடமாகும்,";—என்று ஆங்கிலேயர் மறுமொழி கொடுத்தார்.

இந்த மறுமொழியைக் கேட்டு "கும்பிடப் போன தெய்வம் குறுக்கிட்டுவந்தது" என்று தென்னுபிரிகாவில் போவர்கள் சந்தோஷப்பட் டுக்கொண்டு போவர்த்தலைவர்கள்யாவரும் ஒன்று சேர்ந்து கிச்சனரண்டை நாங்கள் சமாதானத் துக்குப் பிரிடோரியாவுக்கு வருகிறோ மென்ன, அப்படியே பிரிடோரியாவுக்கு நாளது ஏப்பி ரல்மாசம் துவக்கத்தில் வந்து சேர்ந்தார்கள்.

வந்தவுடனே, போவர்கள் 1899-ம் ஆண்டு ப்ளூம்பாண்டீனில் மில்னர், க்ருகர், ஸ்டேயின், ரீட்ஸ், டிவேட், இன்னும் சில போவர்களும் ஆங்கிலே யர்களும் பேசிக்கொண்ட பேச்சுப்படி சமா தானம் முடிக்க வேண்டுமென்றார்கள். கிச்சனர் பிரபுவும் மில்னர் பிரபுவும் 1901ஹு பிப்ரவரிமீ கிச்சனர் போதா பேசிக்கொண்ட பேச்சுகளைப் போவர்களுக்கு நினைப்பு மூட்டி அப்படித்தான் சமாதானம் முடிக்க வேண்டும் என்றார்கள்:—

அதாவது போவர்கள் தானுட்சி வேண்டுமென்று கேட்டார்கள்; அதற்குப் பதிலாய், போவர்கள் ஆங்கிலேயர்க்கு உட்பட்டுத் தானுட்சி யிழந்து தம் நாட்டுத் துரைத்தனத்தில் தமக்கு யாதொரு உரிமையுமில்லாமல் பேசாமடந்தைபோ லிருக்க வேண்டும் என்று ஆங்கிலேயர்கள் சொன்னுர்கள். இந்தமாதிரித் தானுட்சி வேண்டுமென்று கேட்கச் சொன்னது, க்ரூகரும் அவரைப்புடைசூழ்ந்தவரும் தென்னுபிரிகாவுக்குச் சொல்லி யனுப்பித்த ஆக்கினையால்; ஆனல், போவர்கள் முதல் முதல் குரூகர் முதலான பேர்களுடன் தந்திபேசித்தெரிந்துகொள்ள வேண்டுமென்று பாசாங்கு செய்தார்கள்; ஆங்கிலேயர்கள் அது பாசாங்கென்று தெரிந்தோ தெரியாமலோ அதற்கு ஒப்பவில்லை: 'இன்னும் நீங்கள் அதிகமாய்க் கேட்கப்போகிறதா யிருந்தால் சமாதானப் பேச்சையே நிறுத்துங்கள்' என்று கண்டிப்பாய்ச்சொல்லிவிட்டார்கள். முதல்முதல்போவர்கள் கிச்சனரைக்கண்டவுடன் சொன்ன சமாதானப் பேச்சுகளும் கிச்சனர் இஷ்டப்பட்ட சமாதானப் பேச்சுகளும் ஆறுக்கொன்ருய் இருந்தன:— அதாவது, கிச்சனர் பிரபு இஷ்டப்பட்ட பேச்சுகளைக்காட்டிலும் போவர்கள் கேட்டது ஆறு மடங்கு அதிகமாய் இருந்தது; அதாவது யதாப்பிரகாரம் ஆங்கிலேயர்க்கும்போவர்க்கும் ஒத்துவரவில்லை; இருவரும் சேர்ந்து ஒட்டாதவர்களாய்ப் பேசிக்கொண்டார்கள். அப்போது போவர்கள் 'நாங்கள் இந்தமாதிரிப்பேச்சுப் பேசுவதற்கு எங்களுக்கு அதிகார

ஆபிரிகாவில் அமரிக்கை நிலைபெற்றது', அக

மில்லை; நாங்கள் அவரவர் சேனையணிகளண்டை போய்ச் சேனையாட்களைக் கேட்டுக்கொண்டு தங்களிடத்துக்கு மறுபடியும் வந்து எங்கள் கருத்தைத் தெரிவிக்கிறோ' மென்று கிச்சனர் பிரபுவண்டை செலவு வாங்கிக்கொண்டு போய்விட்டார்கள். அவரவர் தத்தம் படையணிகளண்டை போய் ஆங்கிலேயரின் அபிப்பிராயத்தைச் சொன்னபிறகு, அங்கங்கே அந்தந்தப் போவர்ச் சேனையால் பொறுக்கப்பட்ட பொறுக்கரளிகள் யாவரும் 1902ஆம் மேயீ 15ம்தேதி யன்று வெரீநிஜிங் என்னு மூரண்டைவந்து கூட்டங்கூடிப் பேசலாமென்று எண்ணிக்கொண்டு பிரிடோரியாவை விட்டுப் போனார்கள். விட்டபோது நீங்கள் எங்களிடத்தில் திரும்பிவரும்போது சமாதானத்தை ஒரே அடியாய்ப் பேசிமுடிக்க முழு நாட்டாண்மையும் பெற்றுக்கொண்டு வரவேண்டு மென்று கிச்சனர் பிரபு கேட்டுக் கொண்டார்.

பிரிடோரியாவில் இருக்கும்போது போவர்கள் நாங்கள் எங்கள்படையணிகளுக்குப் போய்த் திரும்பி வருகிறவரையில் யுத்தத்தை நிறுத்தி வைக்கவேண்டுமென்றுகேட்டுக்கொண்டார்கள். கிச்சனர் ஒரே போடாய் மாட்டவே மாட்டேன் என்று சொல்லிவிட்டார்; போவர்கள் எங்களுக்குப் பொறுக்காட்சி சீக்கிரத்தில் கொடுக்கவேண்டுமென்று கேட்க அது இப்போதே உங்களுக்குக் கிடைக்காது, ஆயினும் அதைப்பற்றி இங்கிலாண்டுக்கு நான் எழுதுகிறேனென்று பதில் சொன்னார்,

தார்கள். இங்கிலாண்டிலிருந்து சாம்பர்லேன் துரையும் மேற்படி தேதியில் கூடும்படிப் போவர்களுக்கு ஒரு விண்ணப்பம் அனுப்பித்துக் கொண்டார்; போவர்களும் தமக்குள்ளே ஒருவர்க்கொருவர் பேசத்தொடங்கினார்கள்; அன்று முதல் போவர்கள் சமாதான உடம்படிக்கையில் கையெழுத்துப் போடுகிறவரையில் இந்த உலகமெல்லாம் தத்தளித்துக்கொண் டிருந்தது, எங்கே இந்தப் போவர்கள் சமாதானம் வேண்டாமென்று சொல்லி விடுகிறார்களோ என்று ஒரு பயமும் திகிலுமுண்டாயின.

ஒருநாள், போவர்கூட்டத்தில் சமாதானத்துக்கு வேண்டியது ஒன்றும் நடக்கவில்லையென்று தந்தி வந்தது. மற்றொருநாள் 'போவர்கள் ஆங்கிலேயர் இசையாத பேச்சுகள் பேசப்போகிறார்கள்; நாம்சமாதானம் நடக்குமென்று அவ்வளவு சீக்கிரமாய் நம்பிக்கை கொள்ளக்கூடாது' என்று தந்தி ஒன்று வந்தது. போவர் பேசிக்கொண்ட பேச்செல்லாம் வெகு இரகசியமாய் நடந்தது; அந்தச் சமயத்தில் வெரீனிஜிங்கில் எந்தப் படைத்தலைவன் வந்திருந்தானோ அந்தப்படையை ஆங்கிலேயர் தாக்காமல் இருக்கும்படிகிச்சனர் பிரபு உத்திரவிட்டார். வெரீனிஜிங்கில் வந்த போவர்ப் பொறுக்காளிகள் 160 பேர்; எல்லாரும் வெகு பேர்போன போவர்கள்தான்; இந்த 160 பேரில் டிரான்ஸ்வால் நாட்டுப் பொறுக்காளிகள் ஏறக்குறைய எல்லாரும் சமாதானத்துக்கு இஷ்டப்பட்டார்கள்; ஆரஞ்சு நாட்டார்களில் பெரும்பாலார் தானாட்சி வேண்டு

மென்று சொல்லிக் கொண்டார்கள்; சிறுபான்மையோர் டிரான்ஸ்வாலரோடு கலந்து கொண்டார்கள்; இப்படிக் கலந்தவர்கள் வெகு செல்வாக்குள்ளவர்கள். அந்த ஆரஞ்சுநாட்டுப் பெரும்பாலாரால் எங்கே சமாதானம் நடக்காமல் போயோ என்று எல்லாரும் பயப்பட்டுக்கொண்டிருந்தார்கள்.

மே மாதம் 8-ந்தேதி போவர்ப் பொறுப்பாளிகள், 6 போவர்கள், அதாவது டிரான்ஸ்வால்பக்கம் சிலரும் ஆரஞ்சு நாட்டுப்பக்கம் சிலரும் டிவெட் டிலாரியும் பிரிடோரியாவுக்கு வந்துசேர்ந்தார்கள்; அங்கே அவர்கள் கிச்சனர் பிரபுவின் மாளிகைக்குப் பக்கத்து ஒருவிடுதியில் இறக்கப்பட்டார்கள். மில்னர் பிரபுவும் அங்கே வந்து சேர்ந்தார்; இந்த ஆறுபேரில் ஸ்டேயின் குடியரசர்தான் வெகுபலமாய்ச் சமாதானத்தைத் தடுத்துத் தடுத்துப் பேசினார்.

இப்படி யிருந்தபோது சமாதானம் நிச்சயந்தான் என்று நம்பிக்கை கொண்டிருக்க, திடீரென்று போவர்ப் பொறுப்பாளிகள் ஆறுபேரும் பிரிடோரியாவுக்கு வந்தது, கிச்சனர் பிரபுவைச் சில சங்கதிகள் கேட்டுக்கொண்டு போகத்தானே ஒழிய ஒரேயடியாய்ச் சமாதானப்பேச்சை ஒழித்துக் கொண்டு போகவன்று என்று ஒரு தந்திவந்தது. அப்போது எல்லார்க்கும் வயிற்றில் கல நெருப்பு கட்டினாற்போல் அவ்வளவு விசனமுண்டாயிற்று.

கடைசியாய்க் கலகப்போவர்களுக்கு மன்னிப்பு, போவர்களுக்கு நஷ்டம் கட்டிக்கொடுத்தல், * நேராட்சி (குடிகளால் பொறுக்கப்பட்டவர்களே, அல்லது, கீழ்ப்பட்ட அரசனே துரைத்தனத்தை நேராக நடத்திவரும் ஆட்சி), இந்த மூன்றைப்பற்றித்தான் பேசினார்கள்; முதலிரண்டும் கொடுக்கப்பட்டன; கடைசியில் சொல்லப்பட்டது "இப்போது இல்லை, போவர்கள் நன்னடக்கையாய் எவ்வளவு சீக்கிரத்தில் நடந்துகொள்ளுகிறார்களோ அவ்வளவு சீக்கிரத்தில் போவர்களுக்கு நேராட்சிகொடுக்கப்படு" மென்று விடைகொடுக்கப்பட்டது. இந்த விஷயங்களைப்பற்றி கிச்சனரே சுதாவாய்த் தீர்மானம் சொல்லவில்லை; இங்கிலாண்டுக்கு இந்த விஷயங்களைப்பற்றி மில்னர்பிரபுமந்திரிமார்களுக்குத்தந்தியடிக்க, அங்கே மந்திரியார்கள் மேமாசம் 24-ம் தேதி வெகு நேரம் யோசனை செய்து பதிலனுப்பித்தார்கள். முதலில், அந்தப் பதிலுக்கு வெகுநாள் கழித்துத்தான் போவர்கள் தீர்மானம் சொல்வார்கள் என்று நினைக்கப்பட்டது; பிற்பாடு 27-உ யன்று தீர்மானம் வெளிக்கு வருமென்று சொல்லப்பட்டது; அப்போதும் வரவில்லை.

ஸ்டேயின் குடியரசர்க்குப் பார்சுவாயு வந்து க்ளார்க்ஸ்டார்ப்புக்குப் போய்விட்டார்; பிரிடோரியாவில் கிச்சனர், மில்னர், இந்தப்பிரபுக்களுடன் போவர்த் தலைவர்கள் சமாதானப் பேச்சுகள் பேசும்போதுகூட ஸ்டேயின் குடியரசர் அங்கேயில்லை.

ஆபிரிகாவில் அமரிக்கை நிலைபெற்றது. அள

வேரீநிஜிங் என்ற ஊரானது ஆரஞ்சு நாட்
நேர்வடக்கே வால் நதிக்குச்சற்றுத்தூரத்
டிரான்ஸ்வாலுக்குள் இருக்கிறது; போவர்
இங்கே வந்திருக்கும்போது, இங்கிலாண்டில்
கள்மனது சமாதானத்துக்கு விரோதமாய்ந்
ராமலிருக்கும்படி அநேக இராஜ்யதந்திரிகள்
ரபுத்திமதிகளைச்சொல்வதுபோலப்பேசினார்
அநேகநம்பிக்கைவார்த்தைகளையும் எடுத்துப்
ினார்கள். இந்த ஊருக்கு டச்சுப் பாஷையில்
றுமை ஊர்" என்று அர்த்தம்;இந்த ஊர் ஒரு
கிராமம்; இதுதான் ஆரஞ்சுநாட்டுப் பக்கத்
கடைசியாய் இருப்பதுப்பாதை வண்டி நிற்கும்
; இங்கேதான் குரூகர் 1899-ம் ஆண்டு அக்
ாபர் 9-உ கடைப்பேச்சு அனுப்பியபோது,
லாண்டர்கள் (போவரல்லாத அந்நிய வெள்ளைக்
ரச் சாதியார்கள்) ஜானஸ்பர்க்கைவிட்டு ஓடி
து கூடினார்கள்; இங்கேதான் ராபர்ட்ஸ் பிரபு
னவர் போவரை விரட்டிக்கொண்டே போய்க்
டைசியாய் 1900 வருஷம் மேமீ 29-உ யன்று
சேனைகளைக் கொண்டுசாள் தங்கச்சென்றார்;
ங்கே தங்கியில்லாது போனால் வெகுசாய்
ந்த வருஷம் வந்த சமாதானம் இரண்டு வரு
த்துக்கு முன்னாலேயே வந்திருக்கலாம்.

இந்த ஊர் நிலக்கரிச் சுரங்கங்களுக்காக ஏற்
டது; அடர்ந்தகாட்டில்கட்டப்பட்டிருக்கிறது;
க்கத்தில் புல்லடர்ந்த வட்டவெளி பரந்திருக்
கிறது; அக்கம்பக்கத்தில் வேறே ஒரு குடி

மையாவது இல்லை; தன்னந்தனியாய் இருக்கின்றது.

இப்படிப்பட்ட ஊரில் 160 போவர்ப் பொறுக்காளிகளும் சேர்ந்து சமாதானப் பேச்சுக்கு யத்தினம் பண்ணினார்கள்; கடைசியாய் இந்த 160 பொறுக்காளிகளில், 60 பேர்கள் பொறுப்பாளிகளாக நியமிக்கப்பட்டார்கள்; இந்த 60 பேரில், 54 பேர் சமாதானத்தைத் தழுவிப்பேசினார்கள்; இந்தமாதிரி போவர்த் தலைவர்கள் பெரும்பாலார் சமாதானத்துக்கு இஷ்டப்பட்டது யார்க்கும் தெரியாது. இதற்குள் ஹாலண்டு நாட்டில் டச்சுக்குடிகள் ஒரு கதை கட்டி விட்டார்கள்:—தென்னாபிரிகாவிலுள்ள அத்தனை போவர்களுடைய க்ஷேமம் இந்த 160 பொறுக்காளிகளால் நிலைபெறுமா? சமாதானமானால் சில போவர்ப் பெரிய மனுஷர்கள்தான் செல்வாக்குடைத்து க்ஷேமப்படுவார்கள்; மற்றப் பேருக்கு என்னாயிற்று? ஆகையால், படையணிகளிலுள்ள போவர்கள் இந்தத்தடவை சமாதானமாகவிடமாட்டார்கள்;—என்று ஹாலண்டில் சொல்லப்பட்டது; இந்தப்படி நாலு தேசங்களில் நாலுபேர் நானாவிதமாய்ச் சொல்லிப் பிரிடிஷாரை அதைரியப்படுத்திவந்தார்கள்; ஆயினும், சிலபேர்க்குமாத்திரம் சமாதானமாய்விடும் என்ற தைரியம் போகவில்லை; திடீரென்று நாளது ஜூன்மாதம் 1-தேதியன்று போன மேமீ 31-உயில் போவர்கள் சமாதான உடம்படிக்கையில் (தருகர்பேரால்) கையெழுத்துப் போட்டார்களென்று தந்தி வந்

ரது; தநகர் பேரால் என் கைபெழுத்துப் போட வேண்டுமென்றால், சில போவர் விம்பாளிகள் “நாங்கள் தநகர் உடம்படிக்கைக்கு ஒப்புக்கொண்டோமா?” என்று இன்னும் சண்டையை நடத்திக்கொண்டு வரலாம்; அப்படியே கேப்காலனியில் போவர்ப் படைத்தலைவராய் இருந்த போதா என்பவர் டிவெட்டுக்குக் கீழ்ப்பட்டவராயினும் டிவெட்டுக்கு விரோதமாய்ச்சண்டையை நடத்தமாட்டேன் என்று முறைத்துக்கொண்டார்; ஆயினும் சமாதானம் நடந்த உள்ளார்த்தமானத்தைத் தெரிந்துகொண்டு உடனே ஆங்கிலேயர்க்குத் தலைவணங்கிப்போனார்.

இப்படிச் சமாதானமாயிற்றென்று லண்டனுக்குத் தந்திபோகவே குடிகளுக்கு வெகு சந்தோஷமாயிற்று; அங்கங்கே கிறிஸ்தவக்கோயில்களில் ஆராதனை நடந்தன. ஆயினும், அவர்களுக்கு அப்போது வந்த ஆவேசத்தை முழுவதும் காண்பிக்கவில்லை; ஏனென்றால் இராஜன் முடிசூட்டுத்தினத்தில் (1902-ம் வருஷம் ஜூன்மீ 26-உ) அந்த ஆவேசமெல்லாம் சேர்த்துக் காண்பிக்க வேண்டுமென் றிருந்தார்கள்.

இப்போது சமாதானப் பேச்சுக்கள் யாவும் ரோஸ்பரிப் பிரபு சொன்னாப் போலவே முடிந்தன. ஆனால், சில வித்தியாசங்கள் உண்டு:—(1) சமாதானப்பேச்சானது தென்னாபிரிகாவில் போர்த்துரைத்தனத்தாரண்டை நடந்தது, (2) குரூகரண்டை ஐரோப்பாவில் நடக்கவில்லை; கலகட்

போவர்களுக்குள், ஆட்கள் நாட்டுரிமையை யிழந்தார்கள்; அதாவது, துரைத்தனச்சபைக்குப் பொறுக்காளிகளைப் பொறுக்கி யெடுக்கும் உரிமை இனி அவர்க்கு ஆயுள்வரையிலும் இல்லை; இந்தக்கலகப் போவர்களில், போவர்ப் படைகளுக்குத் தலைவர்களாயிருந்தவர்களுக்குச்சிரசாக்கினைத் தண்டனை தவிரமற்றப்படி அவரவர் பிறந்தகுடியேற்ற நாட்டு (கேப்காலனி அல்லது நேடால்) சட்டப்படித் தண்டனைகள் விதிக்கப்படும்.

இப்பொழுது கேப்காலனியில்வெளியிடப்பட்டிருக்கும்விளம்பரப்படி, நாளது வருஷம் ஆகஸ்டு மாதம்10-உக்குள் போவர்ப் படையாட்கள் கீழ்ப்படிந்து இராஜத்துரோகம் ஒப்புக்கொண்டுகடிதமொன்று அப்படி எழுதித் தம் கையெழுத்துப் பண்ணி அனுப்பித்தால் அவர்கள் முன்சொன்ன உரிமையை மாத்திரமிழப்பார்கள், இல்லாவிடில் அதற்குப்பிறகுசிராசாக்கினையும்உண்டு; ஜூன்மீ 16-தேதிவரையில் 16,000 போவர்கள் சண்டை முனையிலிருந்து வந்து கீழ்ப்பணிந்தார்கள்; இன்னும் எவ்வளவு போவர்கள் கீழ்ப்பணிய வேண்டுமோ தெரியவில்லை; ஆங்கிலேயர்கள் இந்த வருஷத்தில் போவர்ப்படைகள்சுமார் 2,000-க்கு மேல் இல்லை என்றார்கள்; குரூகரும் அவர் படைசூழ்ந்தாரும் இன்னும் 15,000 அல்லது 20,000 பேர்க்குக் குறைச்சல் இல்லை என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள், அதை நம்பாமலே இருந்தார்கள்; இந்தமாதிரி ஆங்கிலேயர்கள் சுயபுத்தியே பெரிதென்றும் பரபுத்தி அவ்வளவு சிலாக்கிய

பன்றென்றும் கருதியே இந்த யுத்தத்தில் இவ்வளவு பெரு நஷ்டமும் உயிர்ச்சேதமு மடைந்தார்கள். போதாவே ஆங்கிலேயராண்டை நாங்கள் சமாதானப் பத்திரிகையில் கையெழுத்துப் போடும் தினத்தில் 17,000 போவர்கள் சண்டை-முனையில் இருந்தார்கள் என்றார். கடைசியாய்க் கணக்கிட்டபோது 20,000 பேர்கள் கீழ்ப்படிந்தார்கள் என்று தெரிந்தது.

முதல் முதல், யுத்தத் தொடக்கத்தில் போவர்களுக்கு உள்ள சைனியம் 52,000 பேருக்கு மேலில்லை என்று நினைக்கப்பட்டது; அதாவது, டிரான்ஸ்வாலுக்கு 30,000 பேரும் ஆரஞ்சுநாட்டுக்கு 22,000 பேரும்; இதைத் தவிர போவால்லாத அந்நியஸ்தர்கள் சேர்ந்த படையணிகளும் போவர்களுக்கிருந்தன என்று சொல்லப்படுகிறது. அன்றி, கேப், நேட்டால் இந்நாட்டுக் கலகக்காரர்கள் போவர் பக்கம் சேர்ந்து யுத்தத்தி லணிவகுத்து நின்றார்கள். இவர்கள் யாவருஞ் சேர்ந்து போவர்களுக்குச் சைனியம் 80,000 பேருக்கு, மேலில்லை யென்று இப்போது தெரிகிறது.

இந்த யுத்தத்தில் முதல் முதல் குண்டெறிந்தது 1899-ம் வருஷம் அக்டோபர் மாதம் 12-ஆந் தேதி; கடைசியாய்க் குண்டெறிந்தது, 1902-ம் வருஷம் ஜூன் மாதம் 4-ஆந்தேதி. முதல் குண்டு மேப்கிங்குக்கு 40 மைல் தெற்கே க்ராய்பன் என்ற புகைவண்டி முட்டிய(ரெயில்வே ஸ்டேஷன)ண்டையும், கடைக்குண்டு வேரீநிஜிங்

கண்டையும் ஏற்பட்டன. போவர்த் தலைவரான கேம்ப் என்பவர் போவர்ச் சைனியமானது முதல் முதல் 50,000 பேருக்குமேலில்லை என்றும் அவர்களில் எல்லாருமே சண்டைமுனையில் நிற்கவில்லை என்றும் சொன்னார்.

ஆங்கிலேயச் சேனைகள் 250 - ஆயிரத்தில். குடியேற்ற நாட்டுப் படைகளின் மொத்தம் 29,300 பேர்கள்; அதாவது, கனடாவில் 7,300 பேர்கள்; ஆஸ்ட்ரேலியாவில் 22,000 பேர்கள். இதல்லாமல், இந்தக் குடியேற்ற நாடுகளிலிருந்து தாமாய்ச் சண்டைமுனைக்கு வந்தவர்களும் பலர் உளர்.

கிட்டத்தட்ட நாளது ஜூன் மாதம் 21- தேதி, லார்ட் கிச்சனர் ஜானஸ்பர்க்கில் நடந்த ஒரு விருந்தின்போது போவர்களின் குணாதிசயங்களைப் பற்றிப் பேசினகாலத்தில் "போவர்கள் வெகு தைரியமாய் நம்மைத் தாக்கினார்கள்; திரும்பி ஓடும்போது வெகு சாமர்த்தியமும் யுக்தியும் காண்பித்தார்கள்; இது எல்லார்க்கும் ஒரு திருஷ்டாந்தமாயிருந்தது. போவர்களிடத்தில் இன்னொருகுணமுண்டு. நம்முன்னோர்கள் எப்படி நடந்துகொண்டார்களென்று நாம் கேள்விப்பட்டோமோ அப்படிநாமும் நடந்துகொள்ளவேண்டுமானால், அந்தக் குணத்தை நாமும் கிரகிக்கவேண்டும்:— அவர்கள் பிடித்த பிடிவாதத்துக்கு இரண்டில்லை; தாங்கள் தோற்றபோதிலும், தோற்றோமென்று ஒப்புக்கொள்ள அவர்களுக்கு மனம்வருகிறதில்லை. போவர்களுக்குள் அநேகம் பேர்களுடைய குணங்களையும் வழிகளையும் பார்த்

தால் நமக்குப் பிடிக்காது; ஆயினும், மொத்தத்தில் அவர்கள் வெகு ஆண்மையான சாதியார்; இவர்கள் நம் ஏகாதிபத்தியத்துக்கு ஒரு ஆஸ்தி போல; நாம் எவ்வளவு நன்றாய்ப் போவர்களை நடத்துகிறோமோ அவ்வளவு சீக்கிரமாய் இரு சாதிகளுக்கும் ஒருவிதமான மனஸ்தாபமுமில்லாமல் வெகு சுகமானகாலம் வந்துவிடுமென்று நீங்கள் யாவரும் எண்ணவேண்டியது" என்று விருந்தாடிகளைப் பார்த்துச் சொன்னார்.

ஆகவே, இந்தப் புஸ்தகத்துக்குப் "போவர் பிடிவாத" மென்று கிச்சனர் பிரபுவே பேர்வைக்க இஷ்டப்பட்டதாகச் சொல்லலாம்; இவர்களுக்குப் பிடிவாதமில்லாதபட்சத்தில், இந்த யுத்தம் 1900 வருஷம் மார்ச்சு மாதத்திலேயே நின்று போயிருக்கும். முதல் தாளுட்சியும் மன்னிப்பும் கேட்டார்கள்; அதற்றைக்கிச்சனர் 1900 வருஷத்தில் மறுக்க, கலகப் போவர்களுக்கு மன்னிப்பாகிலும் கொடுங்கள் என்று 1901-ல் கேட்டார்கள் அதுவும் ஆங்கிலேயர் மறுக்கத் தாங்கள் கொஞ்சம் படைகளை வைத்துக்கொண்டிருந்தும், தங்களுக்குச் சாதகம் பண்ணவேண்டிக் கலகம்பண்ணித்தங்களண்டைவந்து ஆங்கிலேயரோடு போர் செய்த கலகப் போவர்களை நன்றிமறந்து ஆங்கிலேயர்க்குக் காட்டிக்கொடுப்பது தகாதென்று நினைத்து வெகு தீரத்துடன் ஜூன்மீ 4௳ வரையிலும் பிராணத்தியாகம் பண்ணிப் போர் நடத்தி வந்தார்கள்.



# * உடன்கூட்டு.

(இந்தப் புஸ்தகத்துக்குள்ளே இந்தமாதிரி (*) அடையாளம் கொடுக்கப்பட்டிருக்கும் மொழிகளுக்கு அர்த்தங்கள் இதன்கீழ்க் குறிக்கப்பட்டிருக்கின்றன.)

| தமிழ் மொழிகள். | தமிழ் மொழிகளின் அர்த்தம். | தமிழ் மொழிக்குச் சரியான ஆங்கிலேய மொழிகள். | அதி. | பக். |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 |
| இராஜாமிசம் | இராஜனுக்குள்ள பலநுணங்களையும் உடைத்தாய் பிறர் ஆதீனத்துக் குட்படாநிலை. | Sovereignty | 1 | 8 |
| அமைதிச்சட்டம் | நாட்டின் துரைத்தனம் அமைக்க ஏற்பட்ட சட்டம். | Constitutional Law | 2 | 16 |
| அரசுக்குடிச்சபை | அரசு நடத்துவதற்கு வந்து கூடிப்பேசுங் குடிகளின் சபை. | Parliament | 2 | 16 |
| காமெடக்கிக் கட்சி | கட்டும் உலகத்தில் திக்கற்ற எளிய நாடுகளை மடக்கித் தம்நாட்டோடு சேர்த்துக்கட்டிக்கொண்டு பெருக்கும்தோரணை உள்ள கட்சி. | Imperialist or Unionist Party | 2 | 16 |

| | | |
|---|---|---|
| | தை நேராக நடத்திவரும் ஆட்சி; பிறர் யாராவது குடிகள் அல்லது அரசன் பக்கம் துரைத்தனத்தாரால் நேமிக்கப்பட்டுத் துரைத்தனம் நடத்தும் ஆட்சி அன்று. | |
| [illegible]ட்டு | மற்றொன்றுடன் சேர்த்துக் கூட்டப்பட்ட ஒரு விஷயத்தைப்பற்றின பத்திரம். | Appendix |
| [illegible]ம் | ஒரு நாட்டில் பல பிரிவுகள் உண்டாய், ஒவ்வொரு பிரிவுக்கும் ஒவ்வொரு தலைவன் இருந்தபோதிலும், அப்பிரிவுகளில் ஏற்படும் சட்டதிட்டங்கள் யாவும் எல்லார்க்கும் மேலதிகாரியான ஒருவன் அனுமதி பெற்றுத் தழுவப்படும் நாடு. | Empire |
| [illegible]யங்கள் | செய்திகள் உட்கொண்டு நாட்டார் யாவருக்கும் அவற்றைத்தெரிவிப்பது (இதுதொல்காப்பியம் என்பதுபோல); இங்கு அம் விகுதி வினை முதல் பொருளில் வந்தது. | Newspapers |